# காந்தித் தாத்தாவை நாம் மறக்க விடாதவர்!



* சக்தி சீனிவாசனுக்கு (இடது) விருது வழங்குகிறார் காஞ்சிப் பெரியவர்.

ஒரு கல்லூரியில் பேசப் போனபோது அந்த முதல்வர் சொன்னார் : ''காந்திய சிந்தனைகள் பற்றிப் பேச உங்களுக்கு மேடை போட்டுத் தருகிறேன். நேரம் ஒதுக்கித் தருகிறேன். மைக் ஏற்பாடு செய்கிறேன். ஆனால் கூட்டம் சேர்க்க என்னால் ஆகாது'' என்று! அவருடைய அவநம்பிக்கையைத் தகர்த்து, காந்தியச் சிந்தனைகளில் ஏராள மாணவர்களைக் கவர்ந்தவர் சக்தி சீனிவாசன்.

காந்தியச் சிந்தனைகளின் அடிப்படையில் மட்டுமே இந்த தேசத்தின் முன்னேற்றம், வளர்ச்சி எல்லாமே அமைய முடியும் என்று நம்புகிற மிகச் சில ஆரோக்கியமான சிந்தனையாளர்களுள் ஒருவர்.

வெள்ளிக் கிழமை தோறும் வானொலியில் ஒலிபரப்பாகிற 'காந்தி அஞ்சலி' நிகழ்ச்சியைக் கடந்த பதினைந்து ஆண்டுகளாகத் தொகுத்து வழங்குகிற குரலுக்கு உரியவர் இதே ஜி. சீனிவாசன்தான்.

ஒரு வெள்ளிவிழா ஆண்டுக்காலமாகவே காந்திய நெறிகளில் ஆத்மார்த்தமான ஈடுபாடு கொண்ட இவருக்கு அண்மையில் காஞ்சிப் பெரியவர் 'சேவாரத்னம்' விருது வழங்கி ஆசி நல்கினார்.

தமிழ் நாடு காந்தி நினைவு நிதியின் சார்பில் தஞ்சாவூர் திருச்சி மாவட்டங்களில் உயர்நிலைப்பள்ளிகளிலும், கல்லூரிகளிலும், கிராமப்புறங்களிலும் தத்துவப் பிரசாரகராகப் பணியாற்றிய சீனிவாசனுக்கு ஆல் இந்தியா ரேடியோவில் வேலை கிடைத்த போது, தரப்பட்ட முதல் பணி 'காந்தி அஞ்சலி' தயாரிப்புத்தான் என்பது எதிர்பாராத ஆச்சர்யம்.

கூட்டு வழிபாடு, எளிமை, உடலுழைப்பு கிராம நிர்மாணத் திட்டங்கள் என்று பல துறைகளிலும் தம்மால் மாணவர்களை ஈர்க்க முடிந்தது என்கிறார் சக்தி.

ஒரு மாணவர் இவரைக் கேட்டார் : ''ஏன் இந்தச் சிரமம் உங்களுக்கு? இந்தப் பணி வருவாய் தருமா? பிழைப்புக்குப் போதுமா? இல்லை, கேட்பவர்கள்தான் திருந்தப் போகிறார்களா?'' என்று.

''அரிச்சந்திர நாடகத்தைக் காலங் காலமாகத்தான் போட்டாகி விட்டதே. இனியும் ஏன் என்று அந்தத் தெருக்கூத்துக்காரர் கைவிட்டிருந்தால், சிறுவன் மோகன்தாஸ் மகாத்மா காந்தியாக உருவாகியிருக்க முடியாது தம்பி!'' என்று அழுத்தமான நம்பிக்கையோடு பதிலளித்தார் சக்தி.

''சர்வோதயப் பணியில் ஈடுபட்டிருந்த போது - எழுபதுகளின் தொடக்கத்தில் திருச்சி மாவட்டம் அரியலூரில் ''பஞ்சத்துக்கு எதிரான மாணவர் அணி'' என்ற தலைப்பில் இளைஞர் முகாம் ஒன்று நடந்தது. செண் ஜோசப், ஜமால் முகம்மது, பெரியார் கல்லூரிகளின் நூற்றைம்பது மாணவர்கள் 6200 அடி நீளமுள்ள கால்வாயைப் புதுப்பித்துக் கொடுத்தார்கள். மாணவர்களின் திறனும் ஆற்றலும் நிறையவே பொங்கிப்பூரிக்கிறது. அவற்றை முறையாக மடைமாற்றினால் இந்த தேசத்தையே புதிதாக மாற்றிக் காட்டலாம்'' என்று சொல்கிற சக்தி, நல்ல கவிஞரும் கூட.

ஆசார்ய வினோபா சொன்னார் : ''நாம் உயர்ந்து நிற்பதற்கு பாபுஜியின் தோள் இருக்கிறது.''

தோள் கொடுக்க இன்னும் காத்திருக்கிறார் அண்ணல்.

அந்த உயரத்தில் நின்று கொண்டு சிந்திக்கும் மனப்பக்குவத்தை வளர்க்கும் பணியைச் செய்கிறார் சீனிவாசன்.

- யெஸ்பால்



# லதாவுக்கு ஏற்பட்ட

■ லதா : வருத்தமான வருத்தம்

நெஞ்சில் ஓர் ஆலயத்தை எடுத்த போது நிர்மாணிக்கப்பட்ட ''ஸெட்'', படப்பிடிப்பு முடிந்ததும் கலைக்கப்பட்டு விட்டது. இப்போது இந்தி படப்பிடிப்புக் காக அதே நர்ஸிங் ஹோம் ஸெட்டை, அதே வாஹினி ஸ்டுடியோவில், அதே படப்பிடிப்புத் தளத்தில் மீண்டும் நிர்மா ணித்தோம். அது மட்டுமல்ல, மறுபடி நாகி ரெட்டியின் அனுமதி பெற்று, சுற்றுச் சுவரை இடித்து, ''நர்ஸிங் ஹோம்'' வாசலில் கார்கள் வந்து நிற்கும் அளவில் இடம் ஏற்படுத்தினோம்!

ஸெட்டுக்கு வெளியே நவீன வசதிக ளுடன் ஏசி செய்யப்பட்ட இரு அறைகள் சேர்க்கப்பட்டன. அவற்றில் ஒன்று, ராஜேந் திர குமார், ராஜ்குமார் போன்ற நடிகர்கள் ஓய்வெடுக்க அமைக்கப்பட்டது. மற்றது மீனாகுமாரிக்கு ரெஸ்ட் ரூம்.

தமிழ்ப் படத்தை முன்பு இருபத் திரண்டு நாட்களில் முடித்ததாகக் கூறினேன் அல்லவா. இப்போது இந்தி படப்பிடிப்புக் காக நட்சத்திரங்களிடம் தொடர்ந்து இருபத் தெட்டு நாட்களுக்குக் கால்ஷீட் வாங்கி யிருந்தேன். ஷெட்யூல் முடிய இன்னும் ஐந்தே நாட்கள்தான் பாக்கி. இன்னும் ஒரே ஒரு பாட்டு மட்டும் வந்து சேரவில்லை. மற்ற பாடல்களையெல்லாம் அற்புதமாக, உரிய நேரத்தில் இசை அமைத்து அனுப்பி யிருந்தார்கள் சங்கர் - ஜெய்கிஷன். நானும் மிகுந்த ஆர்வத்துடனும் சிரத்தையுடனும் என் ஆற்றலை முழுமையாகப் படப் பிடிப்பில் பயன்படுத்தியிருந்தேன். ஆனால் முக்கியமான இந்த ஒரு பாடல் மட்டும் வரவில்லை. எஞ்சியுள்ள நாட்களோ மிகக் குறைவு. ஜெய்கிஷனுடன் ஃபோனில் தொடர்பு கொண்ட போது அவர், ''லதாஜி (லதா மங்கேஷ்கர்) ரொம்ப பிஸியாக இருப்பதால்தான் ரெகார்டிங் தாமதமா கிறது'' என்றார்.

அப்போதுதான் நான் 48 மணி நேர கெடு வைத்தேன்! ''இந்த ஷெட்யூல் முடிந்து விட்டால் மறுபடி நட்சத்திரங் களிடம் கால்ஷீட் வாங்கி, படத்தை முடிப் பது ரொம்பக் கஷ்டம். அதனால் லதாஜி பாடினாலும் சரி, வேறு யாராவது பாடினா லும் சரி, கவலையில்லை. நாற்பத்தெட்டு மணி நேரத்தில் பாடல் வந்து சேர வேண் டும். முடியாது என்றால் அந்தப் பாட்டே எனக்கு வேண்டாம்!''

நான் ஃபோனை வைத்து விட்டேன் - சற்று கோபமாகத்தான். சொல்லி விட் டேனே தவிர, 'எங்கே, அந்தப் பாட்டு வரா மல் போய் விடுமோ' என்று என் மனசு கிடந்து ''பக்பக்''கென்று அடித்துக் கொண் டது. ஏன்?

நெஞ்சில் ஓர் ஆலயம் படத்தில், ''முத் தான முத்தல்லவோ'' என்ற பாடல் வருமே, ஞாபகமிருக்கிறதா?

''இது ஒரு கேள்வியா? அதை மறக்க யாரால் முடியும்?'' என்று நீங்கள் திரும்பக் கேட்பது என் காதில் ஒலிக்கிறது.

அந்த ஹிட் ஸாங்தான் இப்போது சோதனைக்குள்ளாகி என்னையும் சோதித் துக் கொண்டிருந்தது! அந்தப் பாடலை, ''வேண்டாம்'' என்று ஒதுக்க எனக்கு எப்படி மனம் வரும்? இரண்டு இரவுகள் என்னைத் தூக்கமின்றிச் செய்த பிறகு, அந்தப் பாடல் கைக்கு வந்து சேர்ந்து விட்டது! ஜெய்கிஷன் எனக்கு ஏமாற்ற மளிக்கவில்லை. காலக் கெடுவுக்குள் அனுப்பி வைத்ததுடன், சூப்பராக இசை அமைத்தும் இருந்தார். ஒரே ஒரு குறை. அந்தப் பாடலைப் பாடியவர் லதா இல்லை.

அந்தக் குறை தெரியாதவாறு சுமன் கல்யாண்பூர் பாடியிருந்தார் என்பதுதான் முக்கியம். அவருக்கும் லதா போலவே மிக இனிய குரல். ரொம்ப நன்றாக, லயித்து, கேட்பவர் மனம் நெகிழப் பாடியிருந்தார்.

இந்தப் பாடல் மட்டுமின்றி, நெஞ் சில் ஓர் ஆலயத்தின் இந்தி வடிவமான ''தில் ஏக் மந்திர்'' படத்தில் இடம்பெற்ற எல்லாப் பாடல்களுமே, சங்கர் - ஜெய் கிஷனின் அருமையான இசை அமைப்பு காரணமாக, மிகப் பிரபலமடைந்தன. எனக் கும் நல்ல பெயர் வாங்கிக் கொடுத்தன.

# வருத்தம்

டைரக்டர் ஸ்ரீதர்



ராஜ்குமார் : உருக்கமான நடிப்பு

ஆனால் பாவம், சங்கர் - ஜெய்கிஷன்தான் என் காரணமாக ஒரு சிக்கலில் அகப்பட்டுக் கொண்டார்கள். லதா பாட வேண்டிய பாடலை, வேறு ஒரு பாடகியைப் பாட வைத்து விட்டதில் லதாவுக்கு வருத்த மேற்பட்டு, அவர், ''சங்கர் - ஜெய்கிஷன் இசை அமைப்பில் இனி தாம் பாடுவதே இல்லை'' என்று முடிவெடுத்து விட்டார்! இந்தி பட உலகில் இது ஒரு இசை அமைப் பாளருக்கு எவ்வளவு பெரிய இழப்பு என்று கூறத் தேவையில்லை.

தமது முடிவில் ஒன்றரை வருஷ காலம் பிடிவாதமாக இருந்தார் லதா. அதன் பிறகு இருவருக்கும் இடையில் சமாதானம் ஏற்பட்டு, மீண்டும் சங்கர் - ஜெய்கிஷன் இசை அமைப்பில் பாடத் தொடங்கினார்.

இந்த இடைவெளியில் ஒருநாள் நான் கதை எழுதுவதற்காக உட்லண்ட்ஸ் ஹோட் டலில் தங்கியிருந்தேன். மாலை நேரம். சற்று யோசிக்கவும், காலாற நடக்க வும் நான் தோட்டத்துப் பக்கம் போனேன். ஒரு மரத்தடியில் நான் சற்றுத் தயங்கி நிற்க, எனக்குச் சற்றுத் தூரத்தில் ஒரு பெண்மணி. அவர் கையில் ஒரு சிறிய டிரான்ஸிஸ்டர். அதில் ஒலித்துக் கொண்டிருந்தது, ''லாட்லி... லாட்லி...'' முத்தான முத்தல் லவோ பாடலின் இந்தி வடிவம். சுமன் கல்யாண்பூரின் குரலில் ஒலித்த அந்தப் பாடலை ரசித்துக் கேட்டுக் கொண்டிருந் தவர்... லதா! ஆம், லதா மங்கேஷ்கரேதான்!

நான் ஆச்சர்யத்தை ஒதுக்கி விட்டு, விதி அளித்த வாய்ப்பை நழுவ விடாமல் மெல்ல அவரை அணுகி, என்னை அறி முகப்படுத்திக் கொண்டேன். ''நீங்கள் கேட்டுக் கொண்டிருப்பது என் படத்தில் இடம் பெற்ற பாடல்தான்'' என்றேன்.

''குரல் என்னுடையது போலிருக் கிறது; ஆனால் இந்தப் பாடலை நான் பாடியதாக ஞாபகம் இல்லையே'' என்றார் லதா.

நான் நடந்த சம்பவங்களையெல்லாம் சுருக்கமாக விளக்கி, என் சார்பாக மட்டு மின்றி, சங்கர் - ஜெய்கிஷன் சார்பாகவும் வருத்தம் தெரிவித்தேன்.

லதா நாகரிகத்துடன் அந்த விஷயத்தை அப்படியே ஒதுக்கி விட்டு, வேறு சப் ஜெக்டில் பேச்சை திசை திருப்பினார்.

'இந்தச் சம்பவம்தான், சங்கர் - ஜெய் கிஷன் இசை அமைப்பில் லதா மீண்டு பாடக் காரணமாக அமைந்தது' என்று என் னால் சத்தியம் பண்ண முடியாது என்றா லும், இந்தச் சம்பவமும் ஓரளவு உதவி யிருக்கலாம் என்று நம்புகிறேன்.

சுமன் கல்யாண்பூர் இந்தி - திரை உலகில் மிகவும் பிரபலமடைந்திருக்க வேண்டிய பாடகி. மிக வசதியான குடும் பத்தைச் சேர்ந்தவர். அவர் திருமணம் செய்து கொண்டு புகுந்த வீடும் செல்வச் செழிப்பு மிக்கது. அதனால், ஒரு சில பிரபல பாடகிகள் அவர் முன்னேற்றத்துக்கு முட்டுக் கட்டையாக இருந்த போது, அதை எதிர்த்துப் போராட அவர் விரும்ப வில்லை. புகழோ, செல்வமோ, ''இருப் பது போதும்'' என்று தாமாகவே ஒதுங்கிக் கொண்டு விட்டார். இதனால் நஷ்டம் இந்தி திரை உலகுக்குத்தான்.

ராஜ்குமார், ராஜேந்திரகுமார், மீனா குமாரி ஆகியோர் பிரதான வேஷங்களில் நடித்த ''தில் ஏக் மந்திர்'' ரிலீஸ் ஆவதற்கு முதல் நாள், பம்பாயில் அந்தப் படத்தின் பிரத்யேகக் காட்சி ஒன்றுக்கு ஏற்பாடு செய்து, அதற்குப் பிரபல நடிக - நடிகையர், பத்திரிகையாளர்கள், மற்றும் சில திரை உலகப் பிரமுகர்களை அழைத்திருந்தேன்.

அந்தக் காட்சிக்கு வந்திருந்த திலீப் குமார், அதன் சிறப்பால் மிகவும் கவரப் பட்டவராக அன்றிரவே எனக்கு ஒரு விருந் துக்கு ஏற்பாடு செய்து, முக்கிய நண்பர் களை அழைத்து விட்டார்! சுமார் மூன்று மணி நேரம் அவரும் அவருடைய நண்பர் களும் படத்தைப் பற்றியே என்னிடம் பேசிக் கொண்டிருந்தார்கள்!

இதை விடப் பெரிய கௌரவம் ஒன்றை எனக்கு அளித்தார் திலீப்குமார். அது என்ன? பாராட்டு விழாவா? பட்டமா? பொன்னாடையா? வாழ்த் துரையா? யோசியுங்கள். ஒரு வாரம் டைம் தருகிறேன்.

## உங்கள் செல்வம் :

# முதலீடு கோரும் முதல்தர நிறுவனங்கள்

"பங்கு மார்க்கெட்டில் எந்தெந்த நிறுவனங்களில் முதலீடு செய்யலாம்?" என்று பலர் கேட்கிறார்கள். பிரதம மார்க்கெட்டில் மூலதனம் கோரி மக்களிடம் வந்த பல நிறுவனங்களை ஏற்கெனவே இந்தப் பகுதியில் சிபாரிசு செய்து இருக்கிறேன். அவற்றுள் ஒன்று ஐ. டி. பி. ஐ. எனப்படும் இந்திய தொழில் அபிவிருத்தி வங்கி. இந்த வங்கி, பலவகைக் கடன் பத்திரங்களை வழங்க இருக்கிறது என்றும், இவற்றில் Deep discount Bonds மிகவும் பிரபலமாக இருக்கும்; சிறப்பான வரவேற்பைப் பெறும் என்றும் எழுதியிருந்தேன். தற்போது இந்தப் பத்திரங்கள் மக்கள் மன்றத்துக்கு வந்துவிட்டன. பிப்ரவரி 27ம் தேதி வரை விண்ணப்பங்களைக் காசோலையோடு சேர்த்து அளித்து ரசீது பெறலாம்.

சிபாரிசு செய்யப்படும் வேறு சில நிறுவனங்கள் :

### ரெடிமணி :

இன்று மிகவும் பிரபலமாகி விட்ட பெயர் இது. சங்கிலித் தொடராகப் பல கடைகளை நடத்துகிறது இந் நிறுவனம். பிரிஜ் முதல் குண்டூசி வரை பல பொருள்களை விற்கும் சிறப்பு அங்காடிகள் இவை. இந் நிறுவனத்தின் பங்குகள் இரு மடங்குக்கு அதாவது ரூ 20 வரை இன்று பங்கு மார்க்கெட்டில் விலை பேசப்படுகின்றன. வெற்றிகரமாக நடந்து வருவதாக நற்பெயர் பெற்றுள்ள இந்த நிறுவனம், இப்போது விரிவாக்கம் கருதி மக்களிடம் மூலதனம் கோருகிறது. ஒவ்வொன்றும் ரூ 10 மதிப்புள்ள 28,77,800 பங்குகள் விநியோகிக்கப்பட உள்ளன. பங்குகளுக்கான விண்ணப்பங்கள் பிப்ரவரி 10 முதல் பெறப்படுகின்றன. பிப்ரவரி 13ல் பூர்த்தியாகி விடும் என்று கருதப்படுகிறது.

### கோவா அக்ரோ ஆயில்

உணவுப் பொருள்களும் சமையல் எண்ணெயும் ஏற்கெனவே தயாரித்து வரும் நிறுவனம், விரிவாக்கம் கருதி மக்களிடம் மூலதனம் கோருகிறது. சமையல் எண்ணெய்க்கு உள்ள கிராக்கி யாவரும் அறிந்ததே. தலா ரூ 10 மதிப்புள்ள 17,65,000 பங்குகளை வழங்குகிறது. பிப்ரவரி 10 தொடங்கி 13க்குள் முடிந்து விடும். விண்ணப்பங்களைக் காசோலையுடன் இந்த நாலு நாட்களுக்குள் செலுத்தி ரசீது பெறுதல் வேண்டும். இந்த நிறுவனத்தின் பங்குகள் மதிப்பு வெகு சீக்கிரம் உயரும் என்று கருதப்படுகிறது.

### எஸ் அண்டு எஸ் பவர் ஸ்விட்ச் கியர்

மின்சார வாரியங்களுக்கு ஸ்விட்ச்கியர் உபகரணங்களைத் தயாரித்து வழங்கி வரும் நிறுவனம் இது. நல்ல அனுபவம் உள்ளவர்கள். அரசின் ஐந்தாண்டுத் திட்டங்களில் மின் உற்பத்திக்குச் சிறப்பிடம் தரப்பட்டுள்ளதால் நிறுவனத்துக்கு நல்ல எதிர்காலம் இருக்கும்; பங்குகளின் மதிப்பு உயரும் என்று கருதப்படுகிறது. விரிவாக்கம் கருதி மூலதனம் கோரும் இந்த நிறுவனத்தின் பங்குகள் கூடுதல் விலைக்கே மக்களுக்கு வழங்கப்படுகின்றன. பத்து ரூபாய் பங்கு ரூ. 50க்கு வழங்கப்படுகிறது. என்றாலும் இந் நிறுவனத்தின் பங்குகள் ஏற்கெனவே பங்கு மார்க்கெட்டில் மிக அதிகமாக விலை பேசப்படுவதைக் கவனிக்க வேண்டும். பங்குகளுக்கு விண்ணப்பிக்க இன்னும் தேதி குறிப்பிடப்படவில்லை. முதலீட்டாளர்கள் இது தொடர்பாக நாளிதழ்களைக் கவனமாகப் பார்த்து வருதல் நலம்.

### லைஃப் லைன் மெடிகேர்

ஏற்கெனவே "லைஃப்லைன் இன்ஜெக்ட்ஸ்" என்ற பெயரில் பங்கு மார்க்கெட்டுக்கு வந்தவர்கள், இப்போது இந்தப் புதிய துணை நிறுவனம் தொடங்குகிறார்கள். மருந்துகள் தயாரிப்பதில் நல்ல அனுபவம் உள்ளவர்கள். தலா ரூ 10 வீதம் 28,51,500 பங்குகளை விநியோகிக்கிறார்கள். விண்ணப்பத் தேதியை எதிர்நோக்கி முதலீட்டாளர்கள் விழிப்புடன் காத்திருக்கலாம்!

### திருமூர்த்தி ஃபெர்டிலைசர்ஸ்

விவசாய நாடு இந்தியா. ரசாயன உரம் இன்றியமையாதது. இந்த நிறுவனம் ஏற்கெனவே உரம் தயாரித்து வருகிறது. இப்போது விரிவாக்கம். இதற்காக தலா பத்து ரூபாய் மதிப்புள்ள 18,32,000 பங்குகளை விநியோகிக்கிறது. விண்ணப்பங்கள் பெறப்படும் தேதியை எதிர்நோக்கித் தயாராக இருக்கலாம்.

- வி. கோபாலன்

கஜல் உலகில் பளிச்சிடும் பெயர்களான மெஹதி ஹசன், குலாம் அலி, சித்ரா - ஜகஜீத்சிங், அனூப் ஜலோட்டா, பங்கஜ் உதாஸ் வரிசையில் மின்னும் தென்னிந்தியப் பெயர் 'ஏ. ஹரிஹரன்'.

''கஜல்களை நீங்களே இயற்றுவீர்களா?''

''ஆமாம்! இதுவரை 150 கஜல்கள் இயற்றியுள்ளேன்; சில, பாரசீக மொழியை அடிப்படையாகக் கொண்டவை; 7 ஆல்பம்கள் செய்திருக்கிறேன்....''

''நினைத்தவுடன் இயற்றி விடுவீர்களா?''

''இல்லை; அதற்கென்று மனநிலை அமைய வேண்டும்; சில சமயம் மூன்று மாதங்களுக்கு ஒன்றுமே எழுதியிருக்க மாட்டேன்; திடீரென்று 'மூடு' வந்தால் மூன்று மணி நேரத்தில் கூட ஒரு கஜல் பிறந்துவிடும்.''

ஹரிஹரனின் தந்தை செல்லமணி பாகவதரும் தாய் அலமேலு மணியும், கர்நாடக இசையை உயிர் மூச்சாகக் கொண்டவர்கள்; இருவருமே படே குலாம் அலி கானின் விசிறிகள் என்பதால் இந்துஸ்தானி சங்கீதத்தில் ஹரிஹரனுக்கு ஈடுபாடு இயல்பாகவே எழுந்தது. மராத்திய நாடக சங்கீதத்தின் மூலம் மெல்லிசையை இவருக்கு அறிமுகப்படுத்தியவர் மாமா நாராயணன். பம்பாயில் பிறந்து வளர்ந்த ஹரிஹரன் தமது பதினாறாவது வயதில் உஸ்தாத் குலாம் முஸ்தஃபாவைக் குருவாக ஏற்று, முறையாக ஹிந்துஸ்தானி சங்கீதம் பயின்றார்.

''ஒரு தமிழர் கஜல் உலகில் பிரவேசித்ததை எல்லோரும் எளிதில் ஏற்றுக் கொண்டார்களா?''

''எதிர்ப்பு பல முனைகளிலிருந்து கிளம்பியது; 'உச்சரிப்பு சரியாக வராது; ஹரிஹரனுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா?' என்று ஒதுக்கித் தள்ளியவர்கள் ஏராளம். ஆனால் நான் மனம் தளராமல் முயற்சி செய்தேன். ஒரு பஞ்சாபியோ, மராட்டியரோ பாடும் உருதுவை ஏற்றுக் கொண்டவர்கள், தமிழனின் 'உருது'வை நையாண்டி செய்தது என்னுள்ளே ஒரு சவாலைக் கிளப்பியது. நான் ஒவ்வொரு கஜலையும் ஒரு உருது மொழிப் புலவரிடம் காட்டி, இசைவு பெற்று, பின்னர் ஒரு குறிப்பிட்ட வட்டத்தினரிடம் பாடிக் காட்டி, அவர்களிடமும் 'ஓ.கே' பெற்ற பிறகே அரங்கேற்றினேன். அதனால் குற்றம் கண்டுபிடிக்கவே இடமில்லாமல், வீண்பழி சுமத்தியவர்கள் நாளடைவில் வாயை மூடிக் கொண்டுவிட்டனர்'' என்கிறார் ஹரிஹரன்.

77-78 ல் குலாம் அலியும் மெஹதி ஹசனும் இந்தியா வந்திருந்த போது, அவர்களது 'கஜல்' இசை இவரை ஆட்கொண்டுவிட்டது! சாஸ்த்திரீய சங்கீதமும் மெல்லிசையும் இணைந்து ஒரு நவீனக் கலவையை ஏற்படுத்தியதால் அதில் ஒரு தனிக் கவர்ச்சி தெரிந்தது.

அதே காலகட்டத்தில் 'சுர்சிங்கார்'

ஹரிஹரன்:

# உருது கஜல் பாடும் தமிழர்



''வோட்டு எண்ணுகிற இடத்துல என்னங்க தகராறு?''

''ஒண்ணுமில்லிங்க... வேட்பாளரில் யாரோ ஒருத்தர் பழைய பேப்பர் வியாபாரியாம். அவருக்கு விழுந்த வாக்குச் சீட்டுகளை அவரே எடுத்துக்குவேன்னு அடம்பிடிக்கிறார்!''

- தி. ராஜு

நடத்திய நாடு தழுவிய இசைப் போட்டியில் ஹரிஹரன் முதல் பரிசைப் பெற்றது, அவர் வாழ்வில் ஒரு திருப்பு முனையாக அமைந்தது. காலஞ்சென்ற இசையமைப்பாளர் ஜெயதேவ்ஜி இவரைச் சந்தித்து, பாராட்டி, சில வாய்ப்புகளை அளித்ததோடல்லாமல், 'கஜல்'களில் தேர்ச்சி பெற, உருது மொழிப் புலமை இன்றியமையாதது என்ற அறிவுரையையும் வழங்கினார்.

''பாடல்களின் உச்சரிப்பும், பாடப்படும் பொருளும் சரியாகப் புரிந்தால்தான் இசைக்கு உயிரூட்ட முடியும். எனவே இராப்பகலாக உழைத்து, உருது மொழியைக் கற்று, இன்று சொந்தமாகவே கஜல்கள் இயற்றி, இசையமைத்துப் பாடுமளவுக்குத் தேர்ச்சி பெற்றிருக்கிறேன்'' என்றார் சட்டமும் பயின்றுள்ள ஹரிஹரன்.

'மங்கேஷ்கர் சகோதரிகள்' ஹரிஹரனிடம் மிகவும் அன்புடையவர்களாக இருந்திருக்கிறார்கள்! ''ஆஷாஜி எனக்குத் தாய் போன்றவர்; அவருக்கென ஒரு ஆல்பம் செய்திருக்கிறேன். அவர்களுடன் வெளி நாடுகளுக்கும் இசைப் பயணம் சென்றிருக்கிறேன்'' என்கிறார்.

வாழ்க்கையின் உன்னதமான கணங்கள் என்று இவர் நினைப்பது? பல உண்டு... குறிப்பாக ஒன்று எனில் ''இரண்டு வருடங்களுக்கு முன் கானடாவிலிருந்து ஒரு நண்பர் எனக்கு ஃபோன் செய்து, 'உன் காசட்டை மெஹதி ஹாசனுக்குப் போட்டுக் காண்பித்தேன்; மிகவும் ரசித்தார்' என்றார். அப்போது உலகமே என் காலடியில் கழன்ற உணர்ச்சி!''

இத்துறையில் பிரசித்தி பெற்ற குலாம் அலியுடன் நான்கு இசை நிகழ்ச்சிகள் நடத்தியிருக்கிறார் ஹரிஹரன். கவிதா கிருஷ்ணமூர்த்தியுடன் இணைந்து ஒரு 'பாப்-இசைத்தட்டு, பதிவு செய்திருக்கிறார். சினிமாவில் பின்னணியும் பாடுகிறார்.

''பின்னணி என்பதே ஒரு அரிய கலை; சங்கீத அறிவு அதிகமில்லாத ஒரு ஹீரோவுக்குக் குரல் கொடுக்கும் போது, நமது இசைஞானம் வெளிப்படாமலும் அதே சமயம் இசைநயம் ததும்பவும் பாட வேண்டும். அதனால் இந்தத் துறை என்னைக் கவர்ந்தது'' என்கிறார். தமிழில் ஆபாவாணனுக்கென்று, இரண்டு படப்பாடல்களைப் பாடியிருக்கிறாராம். இசையமைக்கும் வாய்ப்புக்களும் இவருக்குக் காத்திருக்கின்றனவாம். சாஸ்த்ரீய சங்கீதத்திலும் நாட்டம் செலுத்தி வருவதாகக் கூறினார்.

''ஃபாஷனுக்காகக் 'கஜல்' கேட்க வந்து, சம்பந்தமில்லாமல் ''வாவ்..... வா'' சொல்லின்ற கூட்டத்தினிடையே பாடும்போது சங்கடமேற்படுவதில்லையா?'' என்றால், சிரிக்கிறார்.

''இசையைத் தொழிலாக ஏற்றபின் எல்லாவிதமான ரசிகர்களையும் சந்திக்கும் மனோபலம் ஒரு கலைஞனுக்குத் தானாகவே வந்துவிடும்; எல்லோரும் இசை ஞானியாக முடியாது; ஆனால் கூட்டத்தைக் குஷிப்படுத்துவதை மட்டும் குறிக்கோளாகக் கொண்டால் இசையின் தரம் தாழ்ந்துவிடும்.''

புகழ் என்பது ஜனரஞ்சகத்தன்மையுடன் இணைந்திருக்கும் இந்தக் காலத்தில், இந்த வாதம் எடுபடுமா என்ற நம் இயல்பான சந்தேகத்துக்கு விடையளித்தார் ஹரிஹரன்:

''ஒரு வட்டத்தை, அமைத்து, அதற்குள் இயங்க வேண்டும் என்ற நிபந்தனையை எனக்கு நானே விதித்துக் கொண்டவன். இந்த இயக்கத்தின் மூலம் எனக்குக் கிடைக்கின்ற புகழ் போதுமானது என்று நான் நினைத்தால், அதைத் தாண்ட வேண்டிய அவசியம் இல்லையே!

''இந்தக் கொள்கைகளினால் சில சமயம் பலமாதங்களுக்கு நிகழ்ச்சிகள் கிடைக்காமலிருந்திருக்கிறது; சற்றே இறங்கி வந்து, மக்கள் எதிர்பார்ப்புக்குத் தலைவணங்கியிருந்தால், இன்னும் நிறைய நிகழ்ச்சிகள் கிட்டியிருக்கும். ஆனால் நான் அப்படிச் செய்யவுமில்லை; அதில் எனக்கு வருத்தமுமில்லை''... இப்படி உறுதியுடன் பேசும் ஹரிஹரனுக்கு ஒரு சிறு குறை:

வெளிநாடுகள் பலவற்றிலும் இசை நிகழ்ச்சிகள் நடத்தி, பெரும் பாராட்டுப் பெற்றிருந்தும் தமிழ் நாட்டில் இவர் பாடியதே இல்லையாம்!

- ஜெயஸ்ரீ ராஜ்

# உங்கள் கடையின் பாதுகாப்புக்கு இது ஒன்றுதான் சிறந்த இன்ஷ்யூரன்ஸ் என்று நினைக்கிறீர்களா?





உங்கள் வியாபாரத்தைப் பெரும் விபத்து தாக்கும் போது, மிகவும் நம்பகமான உங்கள் பாதுகாப்பு அமைப்பும் கைவிட்டு விடக்கூடும். ஏனெனில், உலகின் மிகச் சிறந்த பாதுகாப்பு அமைப்புகூட கொள்ளை, தீ, இடி, கலகம் போன்ற பல அச்சுறுத்தல்களை சமாளிக்கும்படி அமைக்கப்பட்டதல்ல.

எனவேதான், விதியின் பயங்கர விளையாட்டுக்கு ஈடுகொடுக்க, அதி நம்பகமான ஒரு பாதுகாப்பு உங்களுக்குத் தேவை.

யுனைடெட் இந்தியாவின் கடைக்காரர் பாலிசி: அந்த எல்லா ஆபத்துக்களுக்கும், மிக மிகக் குறைந்த செலவில், சிறந்த பாதுகாப்பு தரக்கூடிய முழுமையான இன்ஷ்யூரன்ஸ். இந்தப் பாலிசி உங்களுக்கு மட்டுமல்ல, கடையிலுள்ள எல்லாப் பொருட்களுக்கும் காப்பீடு அளிக்கிறது. இரும்பு பீரோவில் உள்ள பணம், பணப் பெட்டி, அதை எடுத்துப் போகும் போதும் வரும்போதும் பாதுகாப்பு! தவிர சைக்கிள்கள், மூட்டை முடிச்சுகள், நியான் சைன் குளோ சைன் போர்டுகள் முதலானவற்றுக்கும் பாதுகாப்பு!

உண்மையில், நாடெங்கிலுமுள்ள ஆயிரக்கணக்கான கடைக்காரர்களுக்கு, யுனைடெட் இந்தியா மட்டுமே தான், கடையின் முழுப் பாதுகாப்புக்கு உத்தரவாதம் அளிக்கிறது.

இவ்வளவுக்குப் பின்னரும் உங்கள் கடையை நாச சக்திகள் சூரையாடுவதற்கு விட்டுவிடலாமா?

**கடைக்காரர் பாலிசி**

உடனே செயல்படுங்கள். உங்களுக்கும் அருகிலுள்ள யுனைடெட் இந்தியா அலுவலகத்துடன் தொடர்பு கொண்டு, உங்கள் கடைக்கு யுனைடெட் இந்தியாவின் கடைக்காரர் பாலிசியின் பாதுகாப்பு அளியுங்கள்.



**யுனைடெட் இந்தியா**

**இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்**

(ஜெனரல் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியாவின் ஒரு துணை நிறுவனம்)
24, ஒயிட்ஸ் ரோடு
சென்னை-600 014.

**யுனைடெட் இந்தியா**
**இந்த நிலையற்ற உலகிலுள்ள ஒரே பாதுகாப்பு**

ஐயோ... அரிசி விலை ஏறிப் போச்சே... பால் விலை ஏறிப் போச்சே...

பஸ் கட்டணம், மின் கட்டணம் எல்லாந்தான் ஏறிப்போச்சு!

ஜெயலலிதா

ஏன் புலம்பறீங்க? மத்த மாநிலங்களோட ஒப்பிட்டு புள்ளி விவரம் தயாரிச்சிருக்கேன்... இதை நல்லா கூழாக்கிக் கரைச்சுக் குடிங்க... பசியே தெரியாது!

அடடா... கிளி என்னா அழகாப் பேசுது!

ஜெயலலிதா

வாழ்த்துப்பாடி (அன்று)

ஜெயலலிதாவுக்கு ஜே... புரட்சித் தலைவி வாழ்க!

சகிக்கலே... காக்கா மாதிரி கத்துதடி...

வாழ்த்துப்பாடி (இன்று)

அநியாயமா விலை ஏத்திப்புட்டே மத்திய அரசு மேலே பழி போடாதே...

ஊட்டி

உத்தரா யாத்ரா...

எப்படியோ, மீசையிலே மண் ஒட்டாமே தப்பிச்சுட்டாப் போதும்...!

மு.ம. ஜோஷி



கல்கி




1992
பிப்ரவரி 9
மலர் : 50
இதழ் : 28
பிரஜோத்பத்தி
தை 26


# யதார்த்தத்தை உணர்த்திய ஜோஷியின் யாத்திரை

கன்யாகுமரியில் கனஜோராகக் கிளம்பிய ஜோஷியின் யாத்திரை, காஷ்மீரத்தில் கண்ணீர்க் கதையாக முடிந்தது. ஸ்ரீநகர் போலீஸ் தலைமையகத்தில் குண்டு வெடித்ததில் டி.ஜி.பி. உள்பட ஐவருக்குப் படுகாயம். ஜோஷிக்கோ, காமிராக்காரர்களைச் சந்திக்கக் கூடக் கூச்சப்பட்டு மேல் துண்டால் முகத்தை மூடிக் கொள்கிற அளவுக்கு அவமான உணர்வு. இந்த யாத்திரை ஒரு மகத்தான வெற்றியாக முடியப் போகிறது என்று எண்ணி, ஜம்முவில் குவிந்திருந்த பல்லாயிரக்கணக்கான பி.ஜே.பி. தொண்டர்களுக்குப் பெருத்த ஏமாற்றம்.

ஜோஷியின் யாத்திரை நோக்கத்தை யாரும் குறை கூற முடியாது. தேச ஒருமைப்பாட்டினை வளர்ப்பதைத் தவறு என்று யார்தான் சொல்வார்கள்? காஷ்மீரம் இந்தியாவின் ஒரு பகுதி என்று யார்தான் மறுப்பார்கள்? எனவே தில்லியை அடைந்து விட்ட ஜோஷியை, "மேற்கொண்டு யாத்திரை செல்ல வேண்டாம்" என்று கேட்டுக் கொண்டதுடன், காஷ்மீரப் பயங்கர வாதிகளின் திட்டம் தமக்குத் தெரியும் என்றும் உள்துறை அமைச்சர் கூறிய போது இருவித அதிர்ச்சிகள் ஏற்பட்டன.

'இந்திய மாநிலமான காஷ்மீரின் தலைநகரில் இந்திய தேசியக் கொடியை ஏற்ற இந்தியக் குடிமகன் ஒவ்வொருவனுக்குமே உரிமை உண்டு என்னும் போது, "அந்த உரிமையைப் பாதுகாப்பேன்" என்று கூறுவதற்குப் பதில், இப்படிப் பேசுகிறாரே உள்துறை அமைச்சர்' என்ற கசப்புணர்வுடன் கூடிய அதிர்ச்சி ஒன்று. மற்றொன்று, 'இப்படி சவான் பேச வேண்டும் எனில் அங்கு நிலைமை எவ்வளவு மோசமாக இருக்க வேண்டும்' என்ற யதார்த்த உணர்வு ஏற்படுத்திய அதிர்ச்சி.

முதல் அதிர்ச்சி ஏற்படுத்திய கசப்புணர்வும் கோபமும் இரண்டாவது சிந்தனையை அமுக்கி விட்டது. அதனால் அத்வானி, ஜோஷி, வாஜ்பாயி போன்ற பெருந் தலைவர்கள் கூட நிலைமையைச் சரியாகக் கணிக்கவில்லை. அல்லது ஒருவேளை, சரியாக உணர்ந்திருந்தும், 'முன் வைத்த காலைப் பின் வைப்பதா' என்ற சங்கடத்தில் சிக்கி, யாத்திரையைத் தொடருமாறு ஜோஷியைக் கேட்டுக் கொண்டிருக்க வேண்டும். எவ்வாறாயினும் பி.ஜே.பி.யின் கணிப்பில் தவறு ஏற்பட்டு விட்டது. இல்லையெனில், இவ்வளவு பெரிய கூட்டத்தை அங்கே சேர வைத்து ஏமாற்றமளிப்பதற்குப் பதில், வடக்கே செல்லச் செல்ல அடக்கி வாசித்திருப்பார்கள். அப்போது இவ்வளவு பெரிய ஏமாற்றம் யாருக்குமே ஏற்பட்டிராது.

'யாத்திரை வெற்றியா, தோல்வியா?' என்பது பற்றி நீண்ட காலம் சர்ச்சை நடக்கும். என்னதான் "நோக்கம் நிறைவேறி விட்டது" என்று ஜோஷி மார் தட்டினாலும், உடன் வந்த பல்லாயிரக்கணக்கானோரை 'அம்போ' என்று விட்டு விட்டு, பொறுக்கி எடுத்த சிலருடன் மட்டும் அவர் நழுவி, விமானமேறி, 'சரே'லென ஸ்ரீநகரில் இறங்கி, 'சட்டுப் புட்'டென்று கொடியேற்றி விட்டு, 'சடக்'கென்று திரும்ப நேர்ந்தது தோல்வியாகவே கருதப்படும். 'வேறு வழியில்லை' என்பது பி.ஜே.பி. தலைவர்களுக்குக் காஷ்மீர் எல்லையை அடைந்த பிறகுதான் புரிந்திருக்கிறது.

இவையெல்லாம் ஒருபுறமிருந்தாலும் இந்த யாத்திரையின் தோல்வி (அல்லது வெற்றி) யதார்த்த நிலை குறித்து ஒரு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தியிருக்கிறது. அது, 'காஷ்மீர் இன்று நம் வசம் இருப்பதை விட அதிகமாகப் பயங்கரவாதிகள் வசம் இருக்கிறது' என்பதுதான்! போலீஸ் தலைமையகத்திலேயே பயங்கரவாதிகளால் வெடிகுண்டு வைத்து வெடிக்கச் செய்ய முடிகிறது! ஜோஷி வந்த விமானத்தின் மீது ராக்கெட் செலுத்த முடிகிறது! அவர் ஏதோ அந்நியர்-போல் வந்து, அவசர அவசரமாய்க் கொடியேற்றி விட்டு, அதைவிட அவசரமாக வெளியேற வேண்டியிருக்கிறது!

இந்தப் பரிதாப நிலைமைக்கு மத்திய காங்கிரஸ் தலைவர்களோ அல்லது இதர கட்சித் தலைவர்களோ என்ன பரிகாரம் வைத்திருக்கிறார்கள்? திமிங்கிலத்துக்குப் போடப்பட்ட தீனியாகக் கோடிக்கணக்கில் மக்களின் வரிப்பணத்தைக் காஷ்மீரப் பாதுகாப்பு இன்னும் எத்தனை காலம் விழுங்கி ஏப்பம் விடப் போகிறது? முடிவுதான் என்ன? என்று?

கேள்வி கேட்கும் மக்கள் மீது தேசத் துரோக முத்திரை குத்தாமல் பதில் கூற, மத்திய அரசு கடமைப்பட்டிருக்கிறது.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.

இருபது நாள் விடுமுறையின் துவக்க தினம். ஷோபனா குதூகலத்துடனிருந்தார்.

''இருபது நாட்களுக்கு ஷூட்டிங் கிடையாது; டான்ஸ் புரோக்ராம் கிடையாது; மேக் அப் போட்டுக்க வேண்டாம்.'' பள்ளிச் சிறுமியின் உற்சாகத்துடன் ஈரத் தலையை ஆற்றியபடி கூறினார். ''நிறைய கச்சேரிகளுக்குப் போவேன்; என் இஷ்டப்படி சுதந்திரமாய் இருப்பேன்.''

கரும்பச்சை சல்வார், சிறிய பூக்கள் அள்ளித் தெளித்த வெள்ளை கமீஸ் அணிந்து, தமது வேளச்சேரி வீட்டின் வரவேற்பறை சோபாவில் சௌகரியமாக

# தளபதியின் கதாநாயகி

அமர்ந்து, பேட்டிக்குத் தயாரானார்.

வரவேற்பறையின் ஒரு பக்கத்தை ஆக்கிரமித்து நின்ற பியானோவைப் பார்த்துக் கேட்கிறோம் : ''யார் பியானோ வாசிப்பார்கள்?''

''நான்தான்.... முறைப்படி கற்றுக் கொண்டேன். இப்போதெல்லாம் அதிக நேரம் கிடைப்பதில்லை. ஷூட்டிங்கிலிருந்து ஓய்வு கிடைத்தால் பரதநாட்டியம் பயிற்சி செய்யத் தோன்றுகிறது....''

''பத்மினியின் மருமகள் என்று திரையுலகில் முத்திரை குத்துவார்களே.... அப்போது எப்படி உணர்வீர்கள்....?''

''ஏன்? நான் பத்மினியின் மருமகள் தானே? அப்படி அழைக்கப்படுவதில் என்ன தவறு... எனக்குப் பெருமையாகத் தான் இருக்கு.....'' இலேசான ஆச்சரியத்துடன் கூறுகிறார் ஷோபனா.

''அதனால் நீங்கள் பத்மினியைப் போல நடிக்க வேண்டும், பிரகாசிக்க வேண்டும் என்ற தீர்மானிக்கப்பட்ட எதிர்பார்ப்புகளுடன் உங்களைப் பலர் அணுகுவார்கள் இல்லையா? உங்களுக்கென்று ஒரு தனித்தன்மை.....''

''அந்தப் பிரச்னை ஆரம்ப நாட்களில் தான் ஓரளவுக்கு இருந்தது. அதனால் நான் அசௌகரியமாக உணரவில்லை. சிறு வயது முதலே நாட்டியத்தில் ஆர்வம் இருந்தது. நடிக்கும் வாய்ப்பும் கிடைத்தது. அப்போதே பலர் நீ 'பத்மினி மாதிரியே வரணும்' என்று சொல்லிக் கொண்டிருப்பார்கள். அது எனக்குப் பெருமையாகவும் சந்தோஷமாகவும் இருக்கும். ஆனால் இன்றைக்குச் சினிமாத் துறையில் ஷோபனாவுக்கென்று ஒரு 'ஐடென்டிடி' வந்திருப்பதாகவே நான் நினைக்கிறேன். இன்னும் சொல்லப் போனால், சமீபத்தில் அமெரிக்காவில் ஒரு நடன நிகழ்ச்சி அளித்தேன். அப்போது என் அத்தை வந்திருந்தார். நிகழ்ச்சி முடிந்த பிறகு சில குழந்தைகள் அவரைச் சுட்டிக்காட்டி இவர் ஷோபனாவின் அத்தை; முன்கால திரை நட்சத்திரம்





என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். 'ஷோப னாவின் அத்தை' என்று அழைக்கப்பட்டது குறித்துத் தமக்கு அளவில்லாத மகிழ்ச்சி ஏற்பட்டது என்று அத்தை பெருமையுடன் சொன்னபோது எனக்கு நெகிழ்ச்சியாக இருந்தது.

ஒன்பதாவது வயதில் 'மங்கள நாயகி' படத்தில் குழந்தை நட்சத்திரமாகத் தோன்றி யதே ஷோபனாவின் முதல் நடிப்பு அனு பவம். ஏறத்தாழ அதே காலகட்டத்தில்தான் அவரது முதல் நடன அரங்கேற்றமும் (ஒரு திருமண விருந்து நிகழ்ச்சியில்). பள்ளிப் பருவத்தில் அவ்வப்போது சிதறலாய்ச் சில சினிமா வாய்ப்புக்கள் கிடைத்தன; ஏற்றார். பள்ளியிறுதியை அடைந்தபோது சினிமா ஏறத்தாழ முழு நேரத் தொழிலாகிவிட பரீட்சைகளை டுடோரியல் பயிற்சி உதவி யுடன் எழுதித் தேறினார்.

''கடந்த ஏழு ஆண்டுகளில் 150 படங் களில் நடித்திருக்கிறேன்; பிளஸ் டு பரீட்சை யில் நல்ல மதிப்பெண்களும் எடுத்திருக் கிறேன்; நேரம் கிடைக்கும்போதெல்லாம் சித்ரா அக்காவிடம் (சித்ரா விஸ்வேஸ் வரன்) நாட்டியப் பயிற்சிக்குப் போகி றேன்.....''

''பரதம் ஆடும் பெண்கள் திரைப் படங்களில் நடிப்பது சமீபகாலமாக மிக வும் அதிகரித்துள்ளதே... இதற்கு ஏதாவது விசேஷ காரணம் இருக்கும் என்று நினைக் கிறீர்களா.....?''

''தமிழ்நாட்டில் சராசரி குடும்பங்களில் எல்லாம் பெண்கள் இசையோ நடனமோ கற்றுக்கொள்வது மரபுதானே. இத்தகைய குடும்பத்தைச் சேர்ந்த பெண்கள் இப்போது நடிக்கவும் வருகிறார்கள். அவ்வளவுதான். அவர்கள் நாட்டியக் கலைஞர்களாக இருப்பதால் திரையுலகுக்கு வருகிறார்கள் என்று நான் சொல்லமாட்டேன்.''

''ஒட்டுமொத்தமாக முரண்படும் இரு கலைகளை ஒரே மனப்பாங்குடன் எப்படி ஏற்கிறீர்கள்? சினிமா ஆட்டத்துக்கும் பரத நாட்டியத்துக்கும் ஏணி வைத்தாலும் எட்டாதே.....?''

இக் கேள்வி கேட்டதும் ஆச்சரியத் துடன் கண்கள் விரிய நம்மைப் பார்க்கிறார் ஷோபனா.

''இதற்கு விடை ரொம்ப சிம்பிள் : சினிமாவில் நடிக்கும்போது நான் பரத நாட்டியம் பற்றி எண்ணுவதில்லை. நாட் டிய மேடையில் சினிமாவை நினைப்ப தில்லை....''

''சரிதான் - ஆனால் அது எப்படி சாத் தியம் என்றுதான் கேட்கிறோம். பரத நாட்டியம் தெய்வீகக் கலை. அது நம் உள்ளத்தை மேம்படுத்தும் தன்மையுடை யது என்கிறோம். சினிமா நாட்டியத்தின் அசைவுகள் மாறுட இச்சையைத் தூண்டு வனவாக உள்ளனவே....''

இப்படிச் சொன்னதுமே ஷோபனா வின் கண்களில் கோபப் பளபளப்பு!

''ஐ திங்க் யூ ஆர் ராங்! நீங்கள் பரதம் மட்டுமே உயர்வான கலை; மற்ற நடனங் களெல்லாம் மட்டமானவை என்ற ரீதியில்

பேசுகிறீர்கள். அப்படி ஏன் நினைக்க வேண்டும்! எல்லாவித நாட்டியமும் புனித மானதே! மேற்கத்திய நடனம், பாலே, ஏன்..... காபரே நடனம் கூட தெய்வீக மானதுதான். சினிமாவைத் தொழிலாகக் கொண்டவர்களுக்கு, அதை மனப்பூர்வமாச் செய்பவர்களுக்கு, தங்கள் தொழிலே தெய்வீகமானது. க்ரூப் டான்ஸுக்கு அரை குறையாக உடையணிந்து வரும் துணை நடிகைகள் கூட செட்டுக்கு வந்ததும் என்ன செய்வார்கள் தெரியுமா....? முதலில் பூமியைத் தொட்டுக் கண்ணில் ஒற்றிக் கொள்வார்கள்... இப்படி...'' தோள்களுக்கு அருகிலிருந்து கைகளை வளைத்துக் கும்பிட்டுக் காண்பிக்கிறார் ஷோபனா... தொடர்ந்து சொல்கிறார்:

''இந்தச் சைகை முதலில் எனக்கே கொஞ்சம் வியப்பளித்தது. போகப் போக அவர்கள் தங்கள் தொழிலின் பேரில் எவ்வளவு பக்தி வைத்துள்ளார்கள் என்பது புரிந்தது. நாம் என்ன செய்கிறோம் என்பது முக்கியமல்ல.. நம் எண்ணங்கள், உணர்வுகள் தூய்மையாய் இருப்பதே முக்கியம்.'' - மிகவும் உணர்ச்சிவசப்பட்டுப் பேசுகிறார் ஷோபனா.

சமாதானமடையாத மனத்துடன் அடுத்த கேள்விக்குப் போகிறோம்:

''உங்களைப் பொறுத்தவரை சினிமா நடிப்பு என்பது என்ன.....? அதை எத்தகைய அனுபவமாக வர்ணிப்பீர்கள்!''

''ஆரம்பத்தில் நடிப்பு ஏதோ கனவுலக நிகழ்ச்சியைப் போல்தான் எனக்குத் தோன்றியது. போகப்போக அது எவ்வளவு 'கிரியேடிவ்' கலை என்று உணர்ந்தேன். ஒவ்வொரு கணமும் மூளை சுறுசுறுப்பாக இயங்க வேண்டும். மனமும் உடலும் இணைந்து சிருஷ்டித்துக் கொண்டேயிருக்க வேண்டும்.... நடிப்பு மிக அற்புதமான கலைதான்; அதுவும் நகைச்சுவை பாத்திரங்களில், படங்களில் நடிப்பதையே நான் அதிகம் விரும்புகிறேன்... 'மஞ்சி ரோஸு' என்ற தெலுங்கு படத்தில் நகைச்சுவை ரோல் மிகவும் விரும்பிச் செய்தேன்.''

அகன்ற விழிகளும் அழகாகச் சீர் செய்யப்பட்ட நகங்களும் தவிர சினிமா கதாநாயகிகளுக்குரிய 'பாரம்பரிய' லட்சணங்கள் ஷோபனாவிடம் இல்லை. மொழு மொழு கன்னமோ கடைந்தெடுத்தது போன்ற கச்சித உடல் அமைப்போ கிடையாது. ஆனால் முகத்தில் எப்போதும் ஆரோக்கியமான துடிப்பு; நீண்ட கைகளை ஆட்டிப் பேசும் போது மனத்தில் உள்ளவற்றைக் கச்சிதமாய் வெளிப்படுத்த முனையும் வேகம்; விஷமப் புன்னகையில் அவ்வப்போது விரியும் சற்றே தடித்த உதடுகள்... இந்த முகமும் ஆளுமையும் நகைச்சுவை பாத்திரங்களுக்கு இயல்பாய்ப் பொருந்தும் என்றே தோன்றுகிறது. 'பெண்' டீ.வி. சீரியலில் இவர் மிகத் தத்ரூபமாய் வாழ்ந்து காட்டிய காதல் வயப்பட்ட இளம் பெண்ணின் கதாபாத்திரம் நினைவுக்கு வருகிறது. இலேசான நகைச்சுவை இழையோடும் கதை அது.

தமிழில் ஷோபனாவை இன்னும் அதிகமாகக் காண முடிவதில்லையே என்ற ஆதங்கத்தைத் தவிர்க்க முடியாமல் கேட்கிறோம்:

''தளபதிக்குப் பிறகு உங்களுக்குத் தமிழ்ப்பட வாய்ப்புக்கள் அதிகமாக வந்துள்ளனவா.....?''

''அப்படியொன்றுமில்லை......''

# 21



AVAIL 21%
INTEREST
FOR FIXED
DEPOSITS
FROM –

# BALU JEWELLERS

## GROUP CONCERNS

72, USMAN ROAD, T. NAGAR, MADRAS – 600 017.

PHONE : 441812, 441741

| | | |
|---|---|---|
| PERIOD OF DEPOSIT | : | ONE YEAR AND ABOVE |
| AMOUNT OF DEPOSIT | : | Rs. 5000 AND ABOVE |
| INTEREST PAYABLE | : | MONTHLY |

YOGA-SAVITH



# டென்னிஸ் பிறந்தது எங்கே?

## குவிஸ் டைம் :

1. டென்னிஸ் விளையாட்டு பிறந்த நாடு எது?

2. டென்னிஸ் பந்தின் நிறம் என்ன?

3. விம்பிள்டன் சாம்பியன்ஷிப் போட்டிகள் எந்த வருடம் ஆரம்பமாயின?

4. விம்பிள்டனில் ஜூனியர் ஒற்றையர் பிரிவில் ஒரு தந்தையும் மகனும் சாம்பியன்ஷிப் வென்றிருக்கிறார்கள். அவர்கள் யார்?

5. யூ. எஸ். ஓப்பன், பிரெஞ்சு ஓப்பன் போட்டிகள் நடைபெறும் கிரவுண்டுகளின் பெயர் என்ன?

6. விம்பிள்டனில் டை-பிரேக்கிங் முறை எப்போது அறிமுகப்படுத்தப் பட்டது?

7. டேவிஸ் கப் புகழ் டேவிஸுடைய முழுப் பெயர் என்ன?

8. விம்பிள்டன் ஆண்கள் இரட்டையர் அரை இறுதி வரை சென்ற இந்தியர்கள் யார் யார்?

விடைகள் : 51 ம் பக்கம்.

---

''தமிழில் இன்னும் அதிகம் செய்ய வேண்டாமா.... ஒரு திருப்புமுனை வர வேண்டாமா....?''

''நான் திருப்புமுனைக்காகக் காத்திருக்கவில்லை. இப்போது தெலுங்கு, மலையாளம் படங்களில் செய்துள்ள ஒப்பந்தங்களே என் நேரம் முழுவதையும் எடுத்துக் கொண்டுள்ளன...''

'''தளபதி'யில் நடித்த அனுபவம்... எப்படி....?''

''ஓ! மிகவும் ரசமான அனுபவம். மணிரத்னத்தின் உள்ளார்ந்த ஈடுபாடு செட்டில் உள்ள எல்லோருக்கும் ஒட்டுவாரொட்டி போல் பரவிவிடும்.... ஒரு டூயட் பாடலை மட்டும் 5 நாட்களுக்குப் படம் எடுத்தார்கள். அதில் அறுநூறு பேர்... செலவையும் கலைஞர்களையும் நிர்வகித்து வெற்றிகரமாக முடித்தது பெரிய சாதனை.....''

'தளபதி' நினைவுகளில் ஆழும் ஷோபனா ரஜினிகாந்தின் தன்னடக்கத்தை வியப்புடன் நினைவுகூர்கிறார். செட்டில் பெண்கள் யார் வந்தாலும் எழுந்து நின்று, அவர்கள் அமர்ந்த பின்னரே அமரும் ரஜினியின் பண்பை வியக்கிறார்.....

''பெண்களுக்குத் திரையுலகில் இன்றைக்கு எத்தகைய இடம் இருக்கிறது.....?'' ஷோபனாவிடம் கேட்கிறோம்.

"Oh its great. எல்லோரும் ரொம்ப மரியாதையா நடத்துக்கறாங்க.....''

''நடிகைகளுக்கு செட்டில் தரப்படும் மரியாதையைப் பற்றி மட்டுமே கேட்கவில்லை. பெண்களுக்கு எல்லா விஷயங்களிலும் ஆண்களுக்கு இணையான வாய்ப்பு, வசதிகளும் அங்கீகாரமும் இருக்கிறதா.....?''

''அது இன்னமும் ஏற்படவில்லை என்றுதான் சொல்வேன்....'' யோசனையில் புருவங்கள் நெரிய ஷோபனா சொல்கிறார் : ''ஒரு சின்ன உதாரணம் : மேக் அப் கலைஞர்கள் அமைப்பு, பெண்கள் மேக் அப் போடக்கூடாது என்று கடுமையாக எதிர்த்து வருகிறது. ஹேர் ஸ்டைலிங் மட்டுமே செய்வதோடு நிறுத்திக் கொள்ள வேண்டும் என்கிறது. மேக்-அப் புக்குக் கிடைக்கும் அளவு ஊதியம் ஹேர் ஸ்டைலிங்குக்குக் கிடைப்பதில்லை. தங்கள் தொழில் பாதிக்கப்படும் என்ற பயத்தில் மேக்-அப் கலைஞர்கள் இப்படி நடந்து கொள்கிறார்கள். ஆனால் இது நியாயம்தானா?''

''ஒரு முழு நேர நடிகையாக இருப்பதோடு நாட்டியத்தையும் விடாமல் செய்வது சோர்வைத் தரவில்லையா....?'' என்று இறுதிக் கேள்வியாக ஷோபனாவிடம் கேட்கிறோம்.

''உள்ளூரிலிருந்தால் நாட்டியப் பயிற்சிக்கு எப்படியாவது அரை மணி நேரம் ஒதுக்கிவிடுவேன். நான் நாட்டியத்தை அவ்வளவு எளிதில் விட்டுவிட முடியாது. I love dancing.... மேலும், எத்தனை நாட்களுக்கு நான் கதாநாயகி வேடத்தில் நடித்துக் கொண்டிருக்க முடியும்.....? அந்த நிலை மாறி, துணைப் பாத்திரங்கள் செய்ய மட்டுமே வாய்ப்புக் கிடைக்கும் ஒரு தருணம் வருமானால் அந்த வாய்ப்புக்களை நான் ஏற்பேனா....? தெரியவில்லை.... அப்போது என்னை வெளிப் படுத்திக் கொள்ள நாட்டியம் கை கொடுக்கும் என்று நம்புகிறேன்.''

சந்திப்பு : **சீதா ரவி**
படங்கள் : **யோகா**

# வானதி வழங்கும் புதிய புத்தகங்கள்

## நாவல், சிறுகதைகள்

### கல்கி

| | ரூ. பை |
|---|---|
| வீணை பவானி | 12.00 |
| பொய்மான்கரடு | 18.00 |
| மகுடபதி | 14.00 |
| தியாக பூமி | 35.00 |
| மாடத்தேவன் சுனை | 10.00 |
| மயிலைக்காளை | 7.00 |
| அமரவாழ்வு | 10.00 |
| மயில் விழிமான் | 10.00 |
| சொப்பனலோகம் | 4.50 |
| சாரதையின் தந்திரம் | 14.00 |

### எஸ்.எல்.எஸ்.

| | |
|---|---|
| புவன மோகினி (சரித்திரநாவல்) | 38.00 |

### பொன். முத்துராமலிங்கம்

| | |
|---|---|
| தென்னாட்டுப் புரட்சி (சரித்திர நாவல்) | 45.00 |

### இந்திரா சௌந்தர்ராஜன்

| | |
|---|---|
| அம்மா என்றால் அன்பு | 25.00 |
| தூங்காத தர்மங்கள் | 20.00 |
| மாயநிலவு | 25.00 |
| கோட்டைப்புரத்து வீடு | 35.00 |

### துறைவன்

| | |
|---|---|
| கல்லின் கருணை | 22.00 |

### பி.வி.ஆர்.

| | |
|---|---|
| அதிர்ஷ்டதேவதை | 27.00 |

### முகிலன்

| | |
|---|---|
| வைகையின் மைந்தன் | 26.00 |

### மீ. ப. சோமு

| | |
|---|---|
| ரவிச்சந்திரிகா | 40.00 |
| சீதாமணி | 17.00 |

### பொன். பரமகுரு

| | |
|---|---|
| அதிசயக்கனவுகள் | 16.00 |

### கல்கி ஆனந்தி

| | ரூ. பை |
|---|---|
| அமரதாரா (செட்) | 95.00 |

### சியாமளா ராவ்

| | |
|---|---|
| ஜீவநதிகள் (மங்கையர் மலர் பரிசு நாவல்) | 20.00 |

### லா.ச. ராமாமிர்தம்

| | |
|---|---|
| இதழ்கள் | 20.00 |
| மீனோட்டம் | 18.00 |
| துளசி | 22.00 |
| உண்மையின் தரிசனம் | 17.00 |

### சுஜாதா விஜயராகவன்

| | |
|---|---|
| ஒரு பிடி வைரம் | 16.00 |

### ரா.கு. நல்லபெருமாள்

| | |
|---|---|
| குருக்ஷேத்திரம் | 52.00 |
| மயக்கங்கள் | 36.00 |

### சிவசங்கரி

| | |
|---|---|
| நான் நானாக | 22.00 |
| ஆற்றில் ஒரு கால் சேற்றில் ஒரு கால் | 22.00 |

### கு. கிருஷ்ணமூர்த்தி

| | |
|---|---|
| அமுதத்தின் புதல்வி | 22.00 |

### வையவன்

| | |
|---|---|
| மணல்வெளி மான்கள் | 25.00 |

### இலக்கியச் சிந்தனை

### 12 பிரபல ஆசிரியர்கள்

| | |
|---|---|
| வேரில் துடிக்கும் உயிர்கள் | 17.00 |

### அனுராதா ரமணன்

| | |
|---|---|
| நீதிபதி கதைகள் | 20.00 |

### ஜெயஸ்ரீ

| | |
|---|---|
| நியாயம் கேட்கிறோம் I | 24.00 |
| நியாயம் கேட்கிறோம் II | 24.00 |

★ தேவையான புத்தகங்களை வி.பி.பி. யில் பெற கடிதம் எழுதுங்கள். வி.பி.பி., தபால் செலவு தனி.

★ புத்தக வியாபாரிகளுக்கும், பள்ளி, கல்லூரி நூலகங்களுக்கும் தக்க கழிவு தரப்படும்.

விவரங்களுக்கு :

# வானதி பதிப்பகம்

13, தீனதயாளு தெரு,
தி. நகர், சென்னை - 600 017.
போன் : 442810



# அன்புள்ள அம்மு அக்கா,

ஆரொம்ப நாளைக்கு அப்புறம் டிகர் ஃபூட் வந்து ஈகா தியேட்டரில் படம் பார்த்தேன். பாக்ய ராஜின் 'சுந்தரகாண்டம்!'

தப்புப் பண்ணாத மாணவி சிந்துஜாவுக்கு, லவ் லெட்டர் எழுதினதாத் தண்டனை வாங்கிக் கொடுத்திடறார் பாக்யராஜ். அது சவாலா தொடங்கி நிஜக் காதலா மாறிடுது. மாணவியை வாத்தியார் கல்யாணம் செய்துக்கறது தவறான மரபுன்னு சொல்லி, பலனில்லாம, அவசராவசரமாக பானுப்ரியாவைக் கல்யாணம் செய்திட்டு வந்திடறார். சிந்துஜா கவலைப்படறதில்லை. சவாலைத் தொடர்றார். வாயாடி மனைவிக்கும், வலுவில் காதலிக்கும் பெண்ணுக்கும் நடுவில், வால் மாட்டிக் கொண்ட வானரம் மாதிரி பாக்யராஜின் தவிப்பு, பிரச்னைகள், முடிவு. இதுதான் கதையின் உத்தேச சுருக்கம்.

தவிலில் தவில்தான் வாசிக்க முடியும். ஜலதரங்கம் வாசிக்க முடியுமா? பாக்யராஜ் வாசித்திருக்கிறார். காதல், பாசம், குறும்பு, வேகம், வீரம், விவேகம், நகைச்சுவை, நெகிழ்ச்சி எனக் கலந்துகட்டி கமர்ஷியலாகக் கச்சேரி பண்ணி இருக்கிறார். அதையும் வழக்கமான அத்துமீறல் இல்லாம, ஆபாசம் இல்லாம அடக்கின வாசிப்பு.

சொன்னா சாதாரண கேரக்டர்கள். ஆனா இவர் முடுக்கலில் ஜிவ்வுன்னு தனி விமானப் பயணம் மாதிரி சுத்தி வர்றாங்க.

சிந்துஜா : உயரம், துடித்து துடித்து நடை, கண்கள்ல சாட்சாத் பள்ளிக்கூட மாணவியின் குறும்பு, உதடுகள்ல விஷமம்னு வளைய வரார். புஸ்தகத்துல வச்ச மயில் தோகை மாதிரி இவருக்கு நெருக்க வசீகரம்னா, பானுப்ரியா ஒரு மிளகாய் பஜ்ஜி.

மிடுக்கு, அப்பாவித்தனம் என்று கலந்துகட்டி மையமாய்த் தலையாட்டுகிறாரே அதுதான் இவர் காரெக்டர். தேனில் நனைத்த இந்த மிளகாய் பஜ்ஜி அத்தனை நேர சிந்துஜாவின் ஆக்கிரமிப்பையும் 'ஒரு துளி' தொடிப்பில் சமன்படுத்தி விடுகிறது.

வகுப்பில் கலகலப்புக்கு, துக்கத்தில் ஆறுதலுக்கு என நல்ல சிச்சுவேஷன்கள் அமைத்துவிட்டிருப்பதால் சுமாரான பாடல்களை அதன் பரிமாணத்தையும் மீறிக் கூடுதலாய் ரசிக்க முடிகிறது.

உடன் படித்து இன்னும் மாணவனாகவே இருக்கும் அந்த குண்டுப் பையனின் அங்கலாய்ப்பு, பக்கத்து வீட்டு அய்யர் வாத்தியாரின் விளையாட்டுத்தனம் என நெய்யில்வறுத்த முந்திரி, படம் நெடுக. வழக்கமான தமிழ் கதாநாயகிகளுக்கு வரும் மூக்கில் ரத்தம் போன்ற சின்னச்சின்ன சம்பிரதாயக் குறைகளும் உண்டு. ஜன்னலில் எட்டிப் பார்க்கும் சிந்துஜாவைப் பக்கத்து அறைப் பையன்கள் முழு தரிசனம் கேட்க, அவர் உள்ளே வந்து ஒரு சுழல் சுழன்று பூர்த்தி செய்வது அழகு.

'சுந்தரகாண்டம்' - தலைப்புக்குப் பக்கம்பக்கமாய் விளக்க வசனம் உண்டு. சுருக்க விளக்கம் : சுந்தர கமர்ஷியல் கவிதை!

ப்ரியமுடன்,

கூரியர் ஸர்வீஸ் பை : சுந்தர்ஜி

5

''காலைல பார்க்கலாம்'' என்று ஜீப்பிற்கு விடைகொடுத்து விட்டு ஏசிபி தேவதேவன் தன் வீட்டுக் கேட்டில் கை வைத்ததுமே வித்தியாசமாக உணர்ந்தார். பின்னங் கழுத்தில் கோழி இறகால் தடவு வது போல. அவருள் ஏதோ ஒரு எச்சரிக்கை ஆன்ட்டெனா விழித்துக் கொள்ள, சுற்றிலும் பார்த்தார்.

சுத்தமாகச் சந்தடி அடங்கி விட்டிருந்த குளிர் இரவு. நேரம் 11:00. ரொய்ய்ய்ங் என்ற சுவர்க் கோழி ரீங்கரிப்பில் அவ்வப் போது தவளை சங்கேதம் சேர்ந்து கொள்ளத் தோட்டத்தில் ஓசையின்றி நடந்தார்.

ஈரித்திருந்த மண் தரையில் ஆங்காங்கே காலடித் தடங்கள் தெளிவாகத் தென் பட்டன. ஆக, அன்னியர் யாரோ அத்து மீறியிருக்கிறார்கள். வீட்டைச் சுற்றி வலம் வந்தார். கதவுகளும், ஜன்னல்களும் சாத்திய படி இருக்க, வீடு பத்திரமாகத்தான் இருந் தது. ஏதேனும் நோட்டம் விட வந்திருப் பானோ? யார் அவன்? எதற்காக?

யோசனையுடன் வீட்டிற்குள் பிரவே சித்தார்.

11:30. தேவதேவன் படுக்கையில் படுத்த பத்தாவது நிமிடம் அந்த ஓசை அவருக்குத் தெளிவாகக் கேட்டது. சரசர. சரசர. எதையோ சுரண்டுவது போல. விட்டு விட்டுக் கேட்டது. அவருக்குள் சிலிர்த்தது. தலையணை அடியிலிருந்து கைத் துப் பாக்கி உருவிக் கொண்டார்.

வேட்டைக்கு வெளிச்சம் வசதி யில்லை. இருளில் பூனை மாதிரி மெல்ல நகர்ந்தார். முதலில் வீட்டுக்குள். பிறகு வாசற் கதவு சன்னமாகத் திறக்கையில் திடீ ரென்று ஓசை நின்று விட்டது.

குத்துச் செடி விலக்கிப் பார்த்தார். தென்னை மரத்தை அண்ணாந்து ஆராய்ந் தார். எங்கும் எவரும் இல்லை. என்ன ஒரு மாயம்... அதற்குள் எப்படி மறைந்திருக்க முடியும்? மேலும் சிறிது நேரம் வியர்த்த மாகத் தேடி விட்டு ஓய்ந்தார்.

வியப்பையும் மீறி அவரை அலுப்பு ஆக்ரமிக்கப் படுக்கையில் வீழ்ந்தார். டான் கலிலியோ அவருடைய வீட்டுக்குத் தீ வைக்கிறான். தேவதேவன் பதறுகிறார். அடேய். யாராவது காப்பாற்றுங்களேன். அதோ. ஃபயர் சர்வீஸ் எஞ்சின் மணி ஒலித்துக் கொண்டு -

திடுக்கிட்டு விழித்துக் கொண்டார். கனவா... நிஜமா... நிஜம்தான். அபாய மணியோசை. இல்லை. டெலிபோன் அடித் துக் கொண்டிருந்தது.

விளக்கைப் போட்டார். நேரம் இரண் டரைதான் ஆகியிருந்தது. இவ்வளவு அகாலத்தில் யார் போன் செய்வது? குழப் பமுடன் சென்று ரிசீவரை எடுத்தார்.

''ஹலாவ்... யாரு ஏசிபி தேவ தேவனா?''

''ஆமாம்'' என்றார் நிதானமாக. எதிர் முனையில் ஒலித்த குரல் மகா மென்மை யாயிருந்தது; நக்கல் தொனித்தது.

''விட்டுரு துரை!''

''வாட்?''

''டானைப் பிடிக்கிற முயற்சியை நிப்பாட்டிரு துரை. உன்னால முடியாது. புரியுதா? மீறி - ஒண்ணே காலணா மெட லுக்கு ஆசைப்பட்டு அசட்டுத்தனமா ஏதும் செய்தே... ம்கூம். வேணாம் விலகிரு துரை. டான் கலிலியோவோட சித்து விளை யாட்டை உன்னால தாங்க முடியாது!''

''நீ யாருடா ராஸ்கல்?''

எதிர்முனை சிரித்தது. தொடர்ந்து சிங்கம் ஆக்ரோஷமாய் உறுமும் ஒலி கேட் டது. அவ்வளவுதான். தொடர்பு துண்டிக் கப்பட்டது.

இரவு நிகழ்ந்தவை யாவும் டானின் மிரட்டல் முயற்சிகள் என்று அவருக்குத் தற் போது புரிந்தது. சிங்க உறுமலை டேப்பில் பதிவு செய்து... பாவம். வீணாய்ச் சிரமப் பட்டிருக்கிறான் டான். தனக்குள் சிரித்துக் கொண்டார். உயிருக்குப் பயந்த ஒரு சாதா ரணப் போலீஸ்காரன் என நினைத்து விட் டான் போலிருக்கிறது. தன்னுடைய நரம்புகள் இரும்பு இழைகள் என அவன் அறிய நியாயமில்லை...

டான் கலிலியோ

காலையில் தேவதேவன் உற்சாக மாகக் கிளம்பி டிசிபி சண்முகநாதனைச் சந்தித்தார்.

''என்ன ஏசிபி எப்படி ப்ரொசிட் செய்யறதா உத்தேசம்? நம்ம ரெகார்டுகள் யூஸ்லெஸ். டானைப் பத்தி ஒரு தகவலும் தராது. ஒரு சோர்ஸூம் இல்லாம -''

''நம்மகிட்டே ஒரு சோர்ஸ் இருக்கு சார்.''

''என்னய்யா அது?''

''கைதிகளை விசாரிக்கிறோம்! பாம்பின் கால் பாம்பறியும்!'' என்று தேவ தேவன் சிரித்தார்.

''வித்தியாசமான நல்ல மூவ்தான்'' என்றார் சண்முகநாதன் யோசனையுடன், ''பலிக்குமான்னு தெரியலையே தேவா. இவனுங்களுக்கு எந்த அளவு தெரிஞ்சிருக்கும்? தெரிஞ்சாலும் வாய் விடுவானுங்களா? மேலும், எவ்வளவு கன்விக்ட்ஸ்னு விசாரிப்பீங்க?'' என்று மலைத்தார்.

''எல்லாரும் தேவையில்லை சார். நேத்து நம்ம கம்ப்யூட்டரோட மெனக்கிட்டு ஷார்ட் லிஸ்ட் பண்ணிருக்கேன். பர்சனல் தகராறுல குற்றம் செய்தவங்க, பெட்டி தீவ்ஸ் இம்மாதிரி நிறைய ஆசாமிகளை விலக்கிட்டேன். தேர்ந்தெடுத்த கிரிமினல்லை இன்னிக்குச் சந்திக்க ஜெயில் சூப்பிரண்ட்டு ஏற்பாடு செய்திருக்கார்.''

''ஸோ, சுறுசுறுப்பாத்தான் செய்யறீங்க. ஆளுக்குப் பாதியாய்ப் பிரிச்சுக்கிட்டு விசாரிப்போம் தேவா'' என்று சண்முகநாதன் எழுந்து கொண்டார்.

ஒதுக்குப்புறமான தனியறை. காலை 9:30. அருகிலிருந்த உதவியாளன் குறிப்பு எடுக்கத் தயாராக, முதல் கைதியை உட்காரச் சொல்லி விட்டுப் பைல் பிரித்தார் தேவதேவன். வந்தவன் எண் 212. பெயர் மனோகரராம். கடத்துவது அவன் தொழிலாம். பைலில் அவன் ஜாதகம் விலாவாரியாக விரிந்திருந்தது.

''டான் கலிவியோ பத்தித் தெரியுமா மனோகர்?''

''கில்லாடியான கிரிமினல் இ ங் னு கேள்விப்பட்டிருக்கேன் சார்'' என்றான் தயக்கமின்றி.

''அவனைப் பத்தி விவரம் வேணும் மனோ'' என்றார் ஸ்னேகமான குரலில்.

''எனக்கு ஒண்ணும் தெரியாதுங்களே. பார்த்தது கூடக் கிடையாது. டான் பெரிய லெவலுங்க!''

''பயப்படாதேய்யா. நான் உன்னை விசாரிக்கிறது இரகசியம். வெளியே யாருக்கும் தெரியாது. உனக்குத் தெரிஞ்சதைத் தைரியமாச் சொல்லு. பின்னால உனக்குத் தண்டனைக் குறைப்பு வரை உதவலாம்.''

''புரியுதுங்க. ஆனா எனக்கு எதுவும் தெரியாது சார். என்னை நம்புங்க'' என்றான் கையைப் பிசைந்தபடி.

அடுத்து அழைக்கப்பட்டவன்

## பத்மா ரவிசங்கர்

போதைப் பொட்டலம் விற்கும் விற்பன்னன்.

''டானா... அதாருங்க?'' என்று விழித்து விட்டு அவன் விடைபெற்றுக் கொண்டான்.

டான் கலிவியோ எங்கிருக்கிறான்? என்ன வயது? யாது அவன் இயற்பெயர்? அவனை வர்ணிக்க முடியுமா? அவன் கூட்டாளிகள், உதவியாளர்கள் யாரென்று தெரியுமா? அது என்ன சிங்க இலச்சினை?





வரிசையாக வந்த குற்றவாளிகளிடம் விசாரணையைத் தொடர்ந்தார்.

சில கைதிகள் (டான் பற்றிய) அச்சத்தில் அவசரமாகத் தெரியாதென்றனர். உண்மையிலேயே அறியாதவர்களும் இருந்தனர். போலீஸே தங்களை நாடி வந்த பெருமிதத்தில் பொய் அவிழ்த்தனர். எது உண்மை? எது பொய்? குழம்பினார் தேவதேவன். கிடைத்த தகவல்களும் எவ்வளவு முரண்பாடானவை...!

டான் கலிலியோ கறுப்பு சார். செவந்த புள்ளைங்க. முறுக்கு மீசை சாமி. சூப்பரான தாடி. யார் சொன்னதுங்க? குறுந்தாடிங்க. ஒன்றரைக் கண். ம்கூம். பூனைக் கண். வெட்டுத் தழும்பு உண்டு. தழும்பு இல்லைங்க. ஆனா மவனுக்கு மூக்குல மச்சம் இருக்கும். செம்பட்டைத் தலை முடி. அடுத்துப் பெயர்கள். முனுசாமி, ராபர்ட், ஆறுமுகம், சோமையா, யுவராஜ், பிரபாகர் என உதிர்ந்த பல பெயர்கள் அவரின் குழப்பத்தைப் பூர்த்தி செய்து மண்டையைப் பிய்த்துக் கொள்ள வைத்தன.

ஆயினும் அடுத்த நாளும் அலுக்காமல் விசாரணையைத் தொடர்ந்தார் தேவதேவன். வேடிக்கையாகவும் வேதனையாகவும் கைதிகள் முரண்பட - ஏசிபி சற்று சோர்ந்திருந்தார்.

மூன்றாம் நாள் மாலை அவருக்கு ஒரு நம்பிக்கைத் தகவல் கிடைத்தது. தன் வசம் டான் கலிலியோவின் புகைப்படம் இருப்பதாக ஒருவன் டெலிபோன் செய்யவும் பரபரப்பானார் தேவதேவன்...

இதயம் படபடக்க சிந்துஜாவும் பின்னால் திரும்பிப் பார்த்தாள். தொலைவில் ஒரு கறுப்புக் கார் தென்பட்டது.

''நம்மை அது பின்தொடருதுன்னு எப்படிச் சொல்றீங்க பிரகாஷ்?''

''ஓவிய அனுபவத்தினால விஷுவலான விஷயங்கள் சட்னு மனசுலப் பதிஞ்சிரும். லேசுல மறக்காது. காலையில் நாம கிளம்பின ஐந்தாவது நிமிஷம் இந்தக் கறுப்புக் காரைப் பார்த்தேன். அப்புறம் காஷுவலா மூணு தடவைக் கண்ல பட்டுது. இப்போ பத்து நிமிஷமா ஸ்டெடியாப் பின்னால ஒட்டிக்கிட்டிருக்கு! மேலும் உறுதி செய்யறேன் பாரு.''

சொல்லி விட்டுப் பிரகாஷ் காரின் வேகத்தை வெகுவாகக் குறைத்தான். அப்போதும் இரு கார்களுக்கு இடையிலிருந்த இடைவெளி நிலை நிறுத்தப்பட்டிருந்ததில் சிந்துஜா வியந்தாள். பிரகாஷ் சடாரென்று வேகம் கூட்டினான். பின்பற்றும் காரும்...

''இப்போ என்னப்பா செய்றது?'' என்றாள் கவலையுடன்.

''டோன்ட் ஒர்ரி டியர். கார் பயணம் ஏன்னு கேட்டல்ல.. நான் எக்ஸ்பர்ட் டிரைவர் சிந்து. ஓவியத்துக்கு அடுத்து எனக்குக் கொள்ளை ஆசை கார் ஓட்டறதுலதான். எப்படியாவது இவன் கண்ணுல மண் தூவிடுவோம்.''

''ஆமா. நாம கொடைக்கானல் போறது அவனுக்குத் தெரியக் கூடாதுப்பா.''

''வாய்ப்பா வர்ற ஊரு அச்சரபாக்கம். இங்கே டிரங்க் ரோடுல லெஃப்டுல கிளை பிரிஞ்சு ஊருக்குள்ளப் போயிட்டுத் திரும்பவும் வந்து ஜாயின் பண்ணிக்கும்.''

அவன் எதிர்பார்த்த சமயம் விரைவில் வாய்த்தது. முன்னால் மூன்று பஸ்கள் செல்வதைக் கவனித்தான். அதிர்ஷ்டம்தான் இது. ஒலி கொடுத்து வழி வாங்கி ஓவர்டேக் செய்து பஸ்களுக்கு முன்பாக வந்தான்.

அவற்றின் சௌகர்யமான மறைப்பில் பயணித்தவன் கிளைச் சாலையின் முகப்பு வந்ததும் விலகும் விருப்பம் விளக்கிட்டு அறிவித்து விட்டு, சட்டென்று ஓர் ஓரமாக ஒதுங்கிப் புளிய மர மறைவில் காரை நிறுத்தினான்.

சர்சர்ரென்று மூன்று பஸ்களும் சடுதியில் கடந்து ஜி.எஸ்.டி. ரோடில் விரைந்தன.

அந்த நிமிட முடிவில் வந்த கறுப்புக் கார் தயக்கமின்றிப் பிரதான டிரங்க் ரோடில் செவ்வனே செல்லவும் - அதன் நம்பரை மனத்தில் இருத்திக் கொண்டு விட்டு - சிரித்தான் பிரகாஷ்.

அவன் சிரிப்பில் பங்கு கொள்ளாமல் சிந்துஜா சீரியஸாக இருந்தாள்.

''என்னம்மா தீவிர யோசனை?'' என்றவாறு காரைக் கிளப்பிக் கிளைச் சாலையினுள் பிரவேசித்தான் பிரகாஷ்.

''நீங்க தற்காலிகமாத்தான் அவனை ஏமாத்தியிருக்கீங்க பிரகாஷ்.''

''உண்மைதான் சிந்து. ஆனா அதை யோசிக்காம இருப்பேனா? நம்ம மிஸ்டீரியஸ் ஃப்ரெண்டுக்கு உத்தரவாதமான உபத்ரவம் உண்டாக்க உபாயம் ஒண்ணு கைவசம் இருக்கு!''

தொலைவில் தொடர்ச்சியான குன்றுகள் தென்பட, வரிசையாக வந்த கடைகளில் கறுகறுப்புத் துலங்க அச்சரபாக்கம் பெரிய ஊர்தான் என்று பட்டது. 'ஆட்சீஸ்வரர் கோயில் செல்லும் வழி' என்ற அடையாள அம்பு அருகிலிருந்த ட்ரக் ஸ்டோரைப் பார்த்துக் காரை நிறுத்தினான்.

''இங்கே நான் போன் செய்யும் போது கடை ஆசாமிக் கவனத்தை நீ திசை திருப்பி

# பாம்பே டையிங்

## வாங்குவீர் லாபமடைவீர் சலுகை *

# இலவசம்

ஒரு ஜோடி
விவால்டி சாக்ஸ்
(குவாலிடி ரிவார்டு)
மதிப்பு: ரூ. 23.50
அல்லது
ஒரு 'லாக்ப்டி'
பேபி டவல்
(அளவு: 61 × 125 செ.மீ.)
குவாலிடி: 6669
மதிப்பு: ரூ. 23.50

ரூ. 150 மதிப்புள்ள துணி ரகங்கள் வாங்கும்போது.

---

# இலவசம்

ஒரு விவால்டி டி-ஷர்ட்
(பல்வேறு வண்ணங்களில்)
மதிப்பு: ரூ. 76.80
அல்லது
ஒரு அழகிய விரிப்பு
(பல்வேறு வண்ணங்களில்)
(அளவு: 137 × 229 செ.மீ.)
குவாலிடி: 52089
மதிப்பு: ரூ. 76.80

ரூ. 350 மதிப்புள்ள துணி ரகங்கள் வாங்கும்போது.

---

# இலவசம்

ஒரு பிரிண்டட் விரிப்பும்
(அளவு: 137 × 229 செ.மீ.
குவாலிடி 52089)
ஒரு மேட்ச்சிங்
தலையணை
உறையும்
(அளவு: 41 × 66 செ.மீ.)
மதிப்பு: ரூ. 122.70

ரூ. 650 மதிப்புள்ள துணி ரகங்கள் வாங்கும்போது.

---

* இச்சலுகை குறுகிய காலம் அல்லது ஸ்டாக் உள்ள வரை மட்டுமே.

வாசகங்கள் இல்லை. தலைப்புகள் இல்லை. அதிர்ஷ்டக் குலுக்கல் இல்லை.

# பாம்பே டையிங்

ஸ்தாபிதம் 1879

பாம்பே டையிங்கின் அனைத்து துணிரகங்களுக்கும், ரெடிமேடுகளுக்கும் இச்சலுகை வழங்கப்படும்.
பாம்பே டையிங்கின் சில்லறை விற்பனையாளர்களிடமிருந்து ரூ. 150-க்கு மேல் வாங்கப்பட்ட துணிரகங்களுக்கு மட்டுமே இச்சலுகை உண்டு. ஸ்டாக் உள்ளதை பொறுத்து வெகுமதிகள் தேர்வு செய்யப்படும்.

# + 5% தள்ளுபடி கூப்பன்

இலவச இணைப்பு

இவைகளுடன்...

இப்பொழுது வாங்கப்பட்ட துணிரகங்களின் மதிப்பாக இக்கூப்பன் தங்களுக்கு தரப்படுகிறது.

1992 ஏப்ரல், மே மற்றும் ஜூன் மாதங்களில் பள்ளிச்சீருடைகள் வாங்கும் போது செல்லுபடியாகத்தக்கது. இச்சலுகை கேரளா, தமிழ்நாடு, மற்றும் பாண்டிச்சேரியில் மட்டுமே.

இத்திட்டம் விநியோகஸ்தர்களான
சிவ்ராம்ஸ் அஸோஸியேட்ஸ், கோயமுத்தூர் மற்றும் அவர்களின் ரீடெய்ல் மலர்களால் நிர்வகித்து வழங்கப்படுகிறது.

Bankers : The Federal Bank Ltd.



நன்றி : ஜெர்மன் டிரிப்யூன்

வெச்சுக்க.''

நல்லவேளையாக மருந்துக் கடை 'ஈயடித்தது.' பவ்யமாகத் தேவை விசாரித்த கடைச் சிப்பந்தியிடம் லோக்கல் எக்ஸ் சேஞ்ச் எண் கேட்டுக் கொண்டு டெலிபோன் சுழற்றினான் பிரகாஷ்.

எக்ஸ்சேஞ்சிலிருந்து ஊரின் போலீஸ் ஸ்டேஷன் தொலைபேசி எண் தெரிந்து கொண்டதும் இரண்டாம் முறையாக போன் நம்பர் சுழற்றினான். சுற்றிலும் யாருமில்லை. சில மருந்துகளுக்கு ஆர்டர் செய்யும் சாக்கில் சிப்பந்தியைக் கடையின் ஒரு ஓரத்திற்கு ஈர்த்திருந்தாள் சிந்துஜா.

குரலில் டெஸிபல் குறைத்து, ''ஹலோ... இன்ஸ்பெக்டர் ப்ளீஸ்'' என்றான் பிரகாஷ்.

''ஸ்பீக்கிங்''

''உங்களுக்கு ஒரு டிப்! கவனமாக் கேளுங்க இன்ஸ்பெக்டர்'' என்றவன் தங்களைப் பின்பற்றிய கார் நம்பர் சொல்லி அதை வர்ணித்து விட்டு, ''இந்தக் கார்ல ரகசியமாப் போதைப் பொருள் கடத்தல்! 'ஹஷ் ஹஷ்' ஹசிஷ், ப்ரௌன் ஷுகர் சமாச்சாரம். ஆல் வொர்த் ஏ ஃபார்ச்சூன் சார்.''

''மை காட்!'' இன்ஸ்பெக்டரின் குரலில் பதற்றம் தொற்றிக் கொண்டிருந்ததை அவனால் உணர முடிந்தது. ''இப்போ அந்தக் கார் எங்கேய்யா?''

''ஜி.எஸ்.டி. ரோடுல! சீக்கிரமாப் போய் மடக்குங்க. காரைத் தலைகீழாப் புரட்டுங்க.''

''ஹலோ... நீ யாருப்பா?''

''அது அவசியமா? நேரத்தை வேஸ்ட்டு செய்யாதீங்க'' என்று வைத்து விட்டான்.

போன் 'விஷயம்' பற்றிக் கேட்டதும் சிந்துஜா 'ஹுர்ர்ரே' என்று குதித்தாள். ஒரு ரெஸ்டாரெண்டில் அரைமணி போல் கழித்து விட்டுத் திரும்பவும் காரில் கிளம்பினார்கள்.

''யாருப்பா அவன்? எதுக்காக அவன் நம்மைப் பின்தொடர்ந்தான்?'' என்றாள் கவலையுடன்.

''சர்ச் மீ!'' என்று பெருமூச்சு விட்டான்.

''கன்ல பட்டதால இப்போ நமக்குத் தெரிஞ்சுது. ஆனா எவ்வளவு காலமா ஃபாலோ செய்யறானோ...''

''தெரியலையே சிந்து.''

வழியில் வேறு எந்த இடர்ப்பாடும் இல்லை. இருப்பினும் ஒரு முன்னெச்சரிக்கையாகக் கொடைக்கானல் செல்வதை ஒரு நாள் தள்ளிப் போடுவது என்று முடிவெடுத்தனர். பாதுகாப்பு மட்டும் காரணமில்லை; களைப்பாகவும் உணர்ந்தனர். மாலை திருச்சி அடைந்து ஒரு டீலக்ஸ் சூட் வாடகைக்கு எடுத்தனர்.

மறுநாள் காலை பதினோரு மணியளவில் கொடைக்கானல் சென்றடைந்தனர்.

ஹோட்டல் 'க்ரீன் வ்யூ' அமைந்திருந்த ரம்யமான சூழலில் லயித்து, ''ப்யூட்டிஃபுல்!'' என்றவள் மனத்தைப் பறிகொடுத்து விட்டு, ''கிடைக்குமாப்பா?'' என்றாள் ஏக்கமுடன்.

''அறைதானே? கேட்டுப் பார்ப்போம்...'' என்றான் காரை பார்க் ஸ்லாட்டில் செருகி விட்டு.

ஆனால் பிரகாஷ் தன் பெயர் சொன்னதும் ஃப்ரண்ட் ஆபீஸ் அறைச் சாவி எடுத்து நீட்ட, கோபமுடன் முறைத்தாள் சிந்துஜா.

''பொய்தானே?'' என்றாள் குற்றஞ் சாட்டும் குரலில்.

''லைஃபுல இம்மாதிரி சிறு சிறு சஸ்பென்ஸ்கள் சந்தோஷம் சிந்து. பத்து நாளைக்கு இங்கே ரிசர்வ் செய்திருக்கேன்.''

''நேற்று ஒருநாள் வேறு வேஸ்ட் ஆயிருச்சு. சே.''

சிறிய லக்கேஜ்தான் என்று பெல்பாய் புறக்கணித்து நடந்தனர்.

முதல் மாடியிலிருந்தது அவர்கள் அறை.

''இன்னும் என்ன சஸ்பென்ஸ் வெச்சிருக்கீர் கல்லுளி மங்கரே...'' என்று சிரித்த சிந்துஜா ஆர்வ அவசரமாய் அறையினுள் நுழைந்ததும் அலறினாள்.

பதற்றமாய் இரண்டெட்டில் உள்ளே சென்றான். அவள் நடுங்கும் விரல் சுட்டிக் காட்டிய திசையில் -

அலங்காரமான மேசை. மேசை மேல் இரத்தச் சிவப்பு ரோஜா பொக்கே. பொக்கேயுடன் இணைந்து ஒரு அட்டை. அட்டையில் 'வெல்கம்' எழுத்துக்கள். எழுத்துக்களுக்கு மேலே தீட்டப்பட்ட -

ஆக்ரோஷ சிங்கத் தலை இலச்சினை!

(தொடரும்)

பொன் விழா கவிதைப் போட்டி

அறிமுக எழுத்தாளர்

50

# மனக்கதவே திறந்தருள்வாய்

கோ. அங்கயற்கண்ணி



திறந்தருள்வாய் மனக்கதவே
திருநீற்றீசன் அழைக்கின்றான்
தேடித் திரியும் இன்பமதை
திருவருட் பெருமான் அளிக்கின்றான்
தீதில்லா தொரு மறுபிறப்பைத்
திரும்பவும் பிரம்மன் கொடுக்கின்றான்
தீங்கெதையும் தீண்டாமல்
திருக்கதவே திறந்திடுவாய்!

மாதாவும் உன்னிடத்தில்
மனமுருகி நிற்கின்றார்
பிதாவும் பிள்ளையிடத்தில்
பிச்சைகேட்டு வருகின்றார்
ஏழையுனை ஏந்திநிற்க
ஏகபெருமான் ஏங்குகின்றார்
என்னருமை மனக்கதவே
ஈவிரக்கம் காட்டாயோ!

அன்புள்ளம் ஒன்றையே
அல்லாவும் தேடுகின்றார்
எம்மதமாய் இருந்தாலும்
சம்மதமாய்ச் சேர்க்கின்றார்
ஏகாந்த இதயத்திலே
இருளனைத்தும் போக்குகின்றார்
இனியும் என் இதயமே
ஏன் திறக்க மறுக்கின்றாய்?

மனக்கதவின் பூட்டுக்கு
மதச்சாவி மூன்று கொண்டு
மூவருமே அழைக்கின்றார்
மூடிக் கொண்ட மனக்கதவே
முழுவதுமாய்த் திறவாயோ!

# ஒரு கனவின்

டி. குலசேகர்

நகைச்சுவையுணர்வு உள்ளவர் எவராயிருந்தாலும் அந்த பிரம்மாண்டமான சினிமா பேனரைப் பார்த்தால் பொசுக்கெனச் சிரித்து விடுவார்கள். பானுசூர்யாவிற்குச் சிரிக்கத் தோன்றவில்லை. நாயகி, யானைக்குட்டி காதில் ஏதோ ரகசியம் சொல்கிற மாதிரியான பேனர். பார்க்கப் பார்க்க ஆத்திரம் அலை அலையாய்ப் பொங்கியது.

இதென்ன அபத்தம். இப்படியும் நடிக்கத்தான் வேண்டுமா? நடிப்பு எத்தனை உணர்வுபூர்வமானது? அகிலமெங்கும் சென்றடையக்கூடிய சாதனமல்லவா கனவுத் தொழிற்சாலை. அத்தனை சக்தி வாய்ந்த நுட்பத்தைப் புனிதத்தோடும், பொறுப்புணர்ச்சியோடும் அணுக வேண்டாமா? அந்த உத்வேகம் ஏன் பிறப்பதில்லை?

தனக்குள் ஜனித்து, நாளுக்கு நாள் அக்கினிக்குஞ்சாய் அந்த வேகம் வெறியாய் விஸ்வரூபமெடுத்ததில், அடையாறு திரைப்படக் கல்லூரியில் நடிப்புப் பிரிவில் சேர்ந்தாள்.

அக்கம்பக்கம் நைச்சியமாய்ப் பரிகசித்தது. உறவினர் குழாம் மூக்கும் முழியுமா பொண்ணை பெத்தது, இப்படி சினிமால வுட்டு சீரழிய விடறதுக்குத்தானாவென்று அவள் அம்மாவிடம் சொல்லிக்குமைந்தது. அப்பா இதுகுறித்த கருத்து சொல்வதற்குச் சந்தர்ப்பம் வைக்காமல் இவளுக்குப் பத்து வயது நிறைவதற்குள் இறந்து போனார். அம்மா எதுவும் பேசவில்லை. அவளுக்குச் சூர்யாவைத் தெரியும். ஒரு விஷயத்தில் தீர்மானமாய் இருக்கிறாளென்றால் அதில் யாரும் குறுக்கிட முடியாது. அவள் அப்படி.

அவளுக்குள் ஒரு புள்ளியை இட்டுக்கொண்டு அதை எட்டிப் பிடித்தே தீர்வது என்கிற கங்கணத்தோடு பிரயத்தனப்பட்டவள். நடிப்பில் ஒரு மைல் கல்லைத் தொட்டு விட வேண்டும். நமது சாதனை நமக்குப் பிறகும் நிற்க வேண்டும். உணர்வுகளை விழிகளில் கொப்பளிப்பதில் ஒரு ஸ்மீதாபாடீல், தொடிப் பொழுது சிரிப்பில் நூறு பாவம் காட்டுவதில் ஒரு பானுப்ரியா, இதயத்தில் எடை கரைந்து காற்றாய் மிதக்க விடுகிறதில் ஒரு சாவித்திரி, உருகும் பனிமலையாய் மனத்தில் சுகம் பிரவாகமெடுக்க வைக்கிற ராதிகா, எரிமலையும் பனிமலையும் இமைக்கிற நேரத்தில் மாறி மாறி உதிக்கிற விந்தையை முகபாவத்தில் காட்டுகிற மௌனப் புயல் ரேவதி. ஏற்றுக் கொண்ட பாத்திரத்தில் வாழ்ந்து காட்டியதோடு நில்லாமல் சமூகசேவையிலும் சமூகப் போராட்டங்களிலும் தன்னை இணைத்துக் கொண்ட ஷபனா என்று விஸ்வரூபமெடுக்க வேண்டும். ஏற்கிற பாத்திரமாகவே வாழ்ந்து, கலையரசியாய்ப் பவனி வந்து, மக்கள் மனத்தில் விழிப்புணர்ச்சியைப் பதிக்க வேண்டும். இல்லையென்றால் நெஞ்சில் அதற்காக வளர்க்கிற யாகத்திலேயே கரைந்து போக வேண்டுமென்கிற நினைப்பில் உறுதியாயிருந்தாள்.

அதற்கேற்ற மாதிரி நடிப்புப் பிரிவில் அந்த ஆண்டின் சிறந்த மாணவிக்கான தங்கப் பதக்கம் கிடைத்தது. அதனைத் தொடர்ந்து பிரபல இயக்குனர் இயக்கிய படமொன்றில் நடித்தாள். முதல் படமே பெர்லின் திரைப்பட விழாவில் பங்கெடுத்து அவளுக்குப் பரிசைப் பெற்றுத் தந்தது. தமிழ்நாட்டில் இன்னும் ரிலீசாகவில்லை. பரிசு கிடைத்ததால்.

காத்திருந்தாள். நேரம் வரும் என்று. பொறுத்துப் பொறுத்து அதன் உச்சம் சென்று வீழ்கிற பொழுதில் ஒருவழியாய்ப் படம் ரிலீசானது. சென்னையில் ஒரு காட்சியாய் ஐம்பது நாள் தம்பிடித்து ஓடியது. எனினும் இவளுக்கு நல்ல பெயர் கிடைத்தது.

பத்திரிகைகள் 'பளிச்' செஷ ஃபோட்டோ எடுத்து, பேட்டி வெளியிட்டிருந்தன. திரையுத் தயாரிப்பாளர்கள் கையில் அட்வான்ஸோடு வந்தார்கள். கதை பற்றிக் கேட்டதற்குத் தயாராகிறது என்றார்கள்.



# ஆரம்பம்

அவர்களையெல்லாம் கூசாமல் நிராகரித்தாள்.

பிரபல நாவல் ஒன்றை மையமாக வைத்து அந்தப் படம் தயாரித்தார்கள். நல்ல டீம். பணம், எதையும் கருத்தில் கொள்ளாமல் மிகுந்த ஈடுபாட்டோடு ஒன்றிப் போய் நடித்தாள். இருந்தும் அன்றைய நிகழ்ச்சி அவளுடைய வளர்ச்சியையே ஆட்டம் காட்டுகிற அளவு பூதாகாரப்படுத்தப் படும் என்று யாருமே நினைத்திருக்க முடியாது.

நாயகன்கிட்டத் தட்ட புதுமுகம். முதல் படம் ரிலீசாகி இப்போதுதான் நன்றாக ஓடிக் கொண்டிருக்கிறது. காட்சிப்படி ஆபரேஷன் தியேட்டருக்குள் செல்லப் போகிற மனைவியை நாயகன் பாசத்தோடு தழுவிக் கொள்ள வேண்டும்.

டைரக்டர் ஸ்டார்ட் சொன்னதும் காமிரா இயங்க ஆரம்பித்தது. தத்ரூபமாகப் பாத்திரத்தோடு ஐக்கியமாகி, ஆறுதலாய்க் கணவனைத் தழுவிக் கொண்ட போது நாயகனின் கை தேவையில்லாமல் முதுகிலிருந்து இறங்கி இடுப்பில் படர்ந்து....

அடுத்த கணம் பளாரென அறைந்தாள். மொத்த யூனிட்டே ஸ்தம்பித்துப் போனது. அம்மா வைதாள். வளருகிற நடிகைக்கு இத்தனை திமிர் ஆகாதென்றாள். அன்று இரவு புரண்டு புரண்டு படுத்தும் தூக்கம் வரவில்லை.

நினைக்க நினைக்க மனம் கசந்தது. ஒருநேரம் நாயகன் மீது பாவமாய்க் கூட இருந்தது. ஏன்? ஏன் இப்படி? நிறைய யோசித்ததில் நிறைய குழப்பங்கள் நம்மிடையே அலுங்காமல் ஆசனம் கொண்டிருப்பதை உணர முடிந்தது.

பத்திரிகைகள் சில அந்த விஷயத்தை நன்றாகவே ஊதி விட்டன. கிசுகிசு என்கிற பெயரில் காசு பார்த்தன. அந்த யூனிட்டில் வேலை பார்த்த யாரோ ஒரு உதவி இயக்குனர் மட்டும் பானுவிற்குப் பரிந்து பேட்டி தந்திருந்தான்.

சம்பந்தப்பட்ட நாயகனோடு நடிக்க ஒப்பந்தமாகியிருந்த இரண்டு படங்களிலிருந்தும் உடனே தூக்கப்பட்டாள். இது குறித்த சந்தேகத்தை நிவர்த்தித்துக் கொள்ள வேண்டி ஒரு வாசகன் ஒரு பத்திரிகையில்

கேட்ட கேள்விக்கு இப்படி பதில் வந்தது. 'கலைச் சேவை புரிய மட்டுமே அவதரித்த கற்புக்கரசி. இரண்டாம் கண்ணகி'. இப்படிப் பலவிதங்களில் கொச்சைத்தனமான உவமைகளுடன் வர்ணித்து, வாசகர்களின் யூகங்களுக்கு நிறையவே தீனி போடப் பட்டது.

சக நடிகைகளில் சிலர், 'இவளுக எல்லாம் நடிக்க வரலேனு யார் அழுதது? நடிக்க வந்த பிறகு இதென்ன பிகு?' என்று காட்டமாய்ப் பேட்டி கொடுத்ததில், உலகமே தனக்கு எதிராய்த் திரும்பிக் கொண்டு விட்ட மாதிரி இருந்தது. மனத்தின் அடி நாதத்தில் எழுகிற கதறல்களை இவர்கள் புரிந்து கொள்ளவே மாட்டார்களா?

பத்திரிகைகள்தான் எழுதுகின்றன என்றால் ஒரு கூட்டம் அதை விழுந்து விழுந்து படிக்கிறார்கள் என்றுதானே அர்த்தம்? நடிகை என்றால், தங்களுக்குள் அமுத்தி வைக்கப்பட்டிருக்கிற வக்கிர உணர்வுகளை இஷ்டம் போல் கொட்டுவதற்காக ஆன குப்பைத் தொட்டியா என்ன? யார் என்ன கேட்கப் போகிறார்கள் என்கிற கோழைத் தனத்தில் தரம் தாழ்ந்து, தரம் தாழ்த்திப் பேசுகிறவர்களும், எழுதுகிறவர்களும், எழுதுகிறதைப் படிக்கிறவர்களும், ஏன் இதை மட்டும் புரிந்து கொள்ள மாட்டேன் என்கிறார்கள். நானும் மனுஷிதானே. மான அவமானம், ஆசாபாசம் இதெல்லாம் எனக்கும் இருக்காதா? இப்படி எதையாவது எழுதுகிறதையெல்லாம் படித்து விட்டு சந்தோஷிப்பதென்பது கொடூரமில்லையா? சம்பந்தப்பட்டவர் மனது எப்படியெல்லாம் புண்படும் என்பதை ஏன் உணர முடியவில்லை?

அம்மாவின் நினைப்பு கூட ரொம்ப விலகி விடவில்லை. 'பிழைக்கத் தெரியாதிருக்கிறாளே? பான்கேக் பூசினால் மட்டுமே பார்க்க சகிக்குமென்கிற முகரைக் கட்டைகளெல்லாம் கார், பங்களா என்று மினுக்குகிற போது இவள் மட்டும் ஏன் இப்படி அபஸ்வரமாய் நடந்து கொள்ள வேண்டும்' என்று சலித்துக் கொண்டாள்.

சிந்தனையினூடே எதனாலோ உந்தப்பட்டு, 'எதிர்ப்புக்கிடையில் எதிர்நீச்சல் போடறதுதான் வீரியம்... அசந்துறாத.. உன்னால முடியுண்டி.. விடாத... இரண்டுல ஒண்ணு பாத்துருவோம்...' என்று நாசிகள் விரியச் சொல்லிக் கொண்டாள்.

என்னதான் பிரயாசைப்பட்டும் தொடர்ந்து வெளியான ஒருசில படங்களும் சொல்லிக் கொள்கிற மாதிரி அமைய வில்லை. சொன்னது ஒன்று எடுத்தது ஒன்று என்று பலவிதங்களில் சறுக்கி விட்டன. மிஞ்சியது 'ராசியில்லாதவள்' என்கிற

❑ டெலஸ்கோப் தெரியும். கெலிடாஸ்கோப் தெரியும். போரோஸ்கோப் (Boroscope) என்றால் என்ன, தெரியுமா உங்களுக்கு? குளுகுளு கட்டிடங்களில் தூய்மை செய்யப்பட்ட காற்றை Duct என்று அழைக்கப்படும் குழாய்கள் மூலம் கட்டிடத்தின் பல பகுதிகளுக்கு அனுப்புவார்கள். இந்த Duct-ல் உள்ள காற்றின் தூய்மையை போரோஸ்கோப் கண்டுபிடித்துச் சொல்லும். காற்றில் கலந்து விட்ட அசுத்தங்களின் அளவை இந்தக் கருவி மூலம் அறியலாம். இதை இங்கிலாந்து கம்பெனி ஒன்று அறிமுகப்படுத்தியுள்ளது. ஆஸ்பத்திரி போன்ற கட்டிடங்களுக்கு மிகவும் பயன்படும்.

ஆதாரம் : ஏர்கண்டிஷனிங் ஜர்னல்
தகவல் : எஸ். தியாகராஜன்

## கொட்டாங்குச்சிகள் ஸ்பெயினுக்குப் போகின்றன!



❑ அடுத்த ஒலிம்பிக் பந்தயம் ஸ்பெயினிலுள்ள பார்ஸிலோனாவில் நடக்கவிருக்கிறதல்லவா? அங்கே ஐஸ் கிரீம் விற்க உரிமை பெற்ற வியாபாரி ஒருவர், கொட்டாங்குச்சி என்றழைக்கப்படும் தேங்காய் ஓடுகளை ஐஸ்கிரீம் கோப்பைகளாக உபயோகிக்கப் போகிறாராம். இதற்காக இரண்டு லட்சம் தேங்காய் ஓடுகள் தேவையென்று ஆர்டர் தர, கேரள மாநிலத்தில் எர்ணாகுளத்தைச் சேர்ந்த முனம்பம் கிராமத்துக்காரர் பொறுப்பை ஏற்றார். ஒரே மாதிரியான அளவு, வடிவம் கொண்ட தேங்காய் ஓடுகளைத் தரம் பிரித்து அனுப்பும் வேலையில் இவர் ஈடுபட்டிருக்கிறார்!

இங்கே நாம் பிளாஸ்டிக்குக்கு மாறிக் கொண்டிருக்கும் இக்காலத்தில், சுற்றுச் சூழல் பற்றிய அக்கறை மிகுந்துள்ள காரணத்தால் ஸ்பெயின் நாட்டினர் பிளாஸ்டிக்கைப் புறக்கணிக்க, நமது கொட்டாங்குச்சிக்கு அடித்தது யோகம்!

ஆதாரம் : ஹிந்து
தகவல் : வசந்தா சாரி

பட்டம் மட்டுமே. யதார்த்தத்தின் கசப்பில் நினைப்பெல்லாம் குமட்டியது. தேக்கி யிருக்கிற இலட்சியக் கனவு வற்றிப் போய்த் தேய்ந்து விடுகிற பயம் மனத்தில் சாட்டையாய்ச் சொடுக்கியது. உளைச்சலில் மனது கனம் ஏறிக் கொண்டது.

பானுசூரியா தூக்கம் பிடிக்காமல் வதைபட்டுப் போனாள். இரவின் இடையே வந்த அரைத் தூக்கமும் முசுக் முசுக்கெனக் கலைந்து போகும். வெகு நேரம் இருளுக்குள் விழித்துக் கொண்டு உட்கார்ந்திருப்பாள்.

அந்தக் குழப்பமான நேரத்தில்தான் அப்படியொரு சந்தர்ப்பம் வீடு தேடி வந்தது. தன் திரைவாழ்வில் சரிவை ஏற் படுத்திய அதே படத்தில் உதவி இயக்கு னராய் வேலை பார்த்த வசந்தன் வந்தான். முதல் முதல் இயக்கப் போகும் படத்தில் நீங்கள்தான் நடித்துத் தர வேண்டும் என்று தன்னம்பிக்கையோடு வந்தான். அவன் சொன்ன கதை கேட்டதும் அச்சாய் மனத் தில் ஒட்டிக் கொண்டது. யோசிக்காமல் ஒப்புக் கொண்டாள்.

படம் வேகமாக வளர்ந்தது. சிறு இடைவேளைக்குப் பிறகு இந்தப் படம் மூலம் மறுவாழ்வு எப்படியும் கிடைக்கும் என்கிற நம்பிக்கையோடு நடித்தாள். மறு நாள் நடிக்க வேண்டிய காட்சியை முந்தின நாளே கண்ணாடி முன் நின்று திருப்தி வருகிற வரை நடித்துப் பார்த்தாள். அழுது பார்த்தாள். திருப்தியாய் வராத போது

## அருள்வாக்கு

பிரம்மா ஹம்ஸரூபமாகப் போய்ப் பார்த்தும் சிவபெருமானின் சிரஸ் அகப்படவில்லை என்றும், விஷ்ணு வராக ரூபமாகப் போயும் பாதம் அகப்படவில்லை என்றும் சொல்வதன் தாத்பர்யம் என்னவென்றால், பர மாத்மா ஆதி அந்த ஹீனமான வஸ்து என்பதுதான். சிருஷ்டி, பரிபாலனம் எல்லாவற்றையும் கடந்த வஸ்து அது என்பதுதான். இப்படி அடி முடி தேடி பிரம் மாவும் விஷ்ணுவும் பெற முடியாத வரையே, 'என் சாமர்த் தியத்தால் அறிய முடியும்' என்கிற அகங்காரமில்லாமல், அன்போடு பக்தி செய்து உருகினால், வெகு சுலபத்தில் அவர் நமக்கு அகப்பட்டு விடுவார். அன்பினாலே மிக மிக விரைவில் திருப்தி பெற்று அனுக்கிரகிப்பவர் 'சிவபெருமான்' என்பதாலேயே அவருக்கு ஆசுதோஷி என்று ஒரு பெயர் இருக்கிறது. 'ஆஷுடோஷ் முகர்ஜி' என்று ஒரு சீர்திருத்த (reformist) முக்கியஸ்தரைச் சொல் வார்கள். ஆசுதோஷிதான் 'ஆஷு டோஷ்' என்றாயிற்று. 'ஆசுகவி' என் றால் கேட்டவுடனே கவி பாடுகிறவர் அல்லவா? இப்படியே ஸ்மரித்த மாத் திரத்தில் சந்தோஷித்து அநுக்கிரகம் பண்ணுகிற வள்ளல்தான் ஆசுதோஷி.

சகல பிரபஞ்சமும் அடங்கி யிருக்கிற லிங்க ரூபமானது ஆவிர் பவித்த சிவராத்திரி மகா சதுர்த் தசியிரவில் அவரை அப்படியே ஸ்மரித்து ஸ்மரித்து அவருக்குள் நாம் அடங்கியிருக்க வேண்டும். அதைவிட ஆனந்தம் வேறில்லை.

-ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.



சீத்தலைச்சாத்தனார் மாதிரி தன்னைத் தானே நறுக்கெனக் குட்டிக் கொண்டாள்.

எல்லோரின் கணிப்பையும் மிஞ்சிப் படம் பிய்த்துக் கொண்டு ஓடியது. உடனே எங்கிருந்தோ ராசி வந்து ஒட்டிக் கொண்டது. போதும் போதும் என்கிற அளவு தயாரிப்பாளர்கள் வீட்டைச் சுற்றி முற்றுகை யிட்டார்கள். கேட்ட தொகைக்கு ஒப்பந்தம் செய்யத் தயாராயிருந்தார்கள். அபவாதம் கற்பித்தத் தயாரிப்பாளர்கள் கூட அபிப்பிராயங்களை மாற்றிக் கொண்டு நயமுடன் அணுகினர். பானு தனது பாத்திரத்தைத் தேர்ந்தெடுப்பதில் மட்டும் எப்போதும் போல் தெளிவாக இருந்தாள். ஆர்க்லேம்ப் வெளிச்சத்தில் நின்று மூன்று ஷிஃப்ட் நடித்ததில் உடம்பு சோர்ந்தாலும், மனத்தில் உற்சாகம் கூடிக் கொண்டே போனது.

அடுத்தடுத்து வெற்றியை ஸ்தாபித்ததும் முன்னணி கதாநாயகர்கள் கூட பானுவோடு நடிக்க ஆர்வம் காட்டினார்கள். பானுவைப் பழித்துப் பேசிய நடிகைகளெல்லாம் இப்போது பானுவுக்கு அக்காவாக, ஏன் அம்மாவாகக் கூட நடித்தார்கள்.

பானுவுக்கு ஒவ்வொரு படமும் ஒரு புது அனுபவமாய்த் தெரிந்தது. வைக்கிற ஒவ்வொரு அடியையும் அழுத்தத்தோடும், நிதானத்தோடும் வைக்க வேண்டியிருந்தது. பல்மொழிகளிலும் நடிப்பதற்குத் தேடி வந்ததில், கூடிய சீக்கிரமே பானுவைத் தெரியாதவர்கள் இல்லை என்றாயிற்று.

அன்று அந்த விஷயம் கேள்விப்பட்டதும் மனசு முழுக்க ஒருவித நடுக்கம். பதற்றமா? சந்தோஷமா? உயர்த்தப்பட்டிருக்கிற பொறுப்புணர்ச்சியின் அழுத்தமா? எதனாலோ உடம்பெல்லாம் சிலிர்த்துக் கொண்டது அந்த சேதி கேட்டதும். டெலிஃபோனில் வசந்தன்தான் பேசினான்.

''பானு... ஒரு குட் நியூஸ்... இந்த வருஷத்தைய இந்தியாவின் சிறந்த நடிகை விருது உங்களுக்குக் கிடச்சிருக்கு...'' என்றதும், ஒரு நிமிஷம் அப்படியே உறைந்து போய் உட்கார்ந்து விட்டாள். கண்களில் தாரை தாரையாய்க் கண்ணீர். வார்த்தைகள் சிக்கிக் கொண்டு வெறும் காற்று மட்டும் வெளிக் கிளம்ப, ஜென்ம பிரயத்தனப் பட்டு, ''நிஜமாவா?'' என்றாள். ''நிஜம்... நிஜம்... நிஜம்...'' என்று படபடத்தவன் ஒரு நொடி நிதானித்து, ''ஒங்க லட்சியம் நிறைவேறிடுச்சு இல்லையா?'' என்றதற்கு, ''இல்லை. இப்பத்தான் நிறைவேற ஆரம்பிச்சிருக்கு...'' என்றாள்.


டோக்யோவில் பழைய ஜீன்ஸ் கடை.

# இரண்டாயிரம் டாலருக்குப் பழைய ஜீன்ஸ்!



## ஃபாஷன் பக்கம் :

ஜீன்ஸ் - தொழிலாளர் உடையாக ஆரம்பித்து இன்று டாப் ஃபாஷன் உடையாக மாறிவிட்டது. 200 ரூபாய் முதல் இரண்டாயிரம் ரூபாய் வரையில் ஜீன்ஸ் இருக்கிறது.....

இவ்வளவு விலை கொடுத்து வாங்குவது புதுத் துணியாக இருக்க வேண்டும் என்றே கருதுவோம்.

ஆனால் விலை கொடுத்து வாங்கிய புது ஜீன்ஸைத் துவைகல்லில் தேய்த்துப் 'பழசாக்கி', வெளிறச் செய்து மகிழ்வார்கள் நம் இளைஞர்கள்!

ஜப்பானில் இரண்டாயிரம் டாலர் வரை கொடுத்து ஒரே ஒரு பழைய ஜீன்ஸைக் கடையில் விலைக்கு வாங்குகிறார்கள் - 1950 களில் தயாரான ஜீன்ஸ்! நாற்பது வருடங்களுக்கு முன்தைய, உபயோகிக்கப்பட்ட ஜீன்ஸை பெருமிதத்துடன் அணிகிறார்கள். அங்கு இதுதான் இன்றைய ஃபாஷன்! டோக்யோவில் மட்டும் இத்தகைய பழைய துணிகள் விற்கும் நூறு கடைகள் உள்ளன!

சென்ற ஆண்டின் முதல் ஐந்து மாதங்களில் மட்டுமே 1,016 டன் எடையுள்ள பழைய துணிகளை ஜப்பான் அமெரிக்காவிலிருந்து இறக்குமதி செய்தது!

இதனால் அமெரிக்கர்களுக்கு ஏகக் கொண்டாட்டம். அவர்களுடைய பழைய ஜீன்ஸ்களுக்கு நல்ல விலை கிடைக்கிறது. இத்தகைய ஜீன்ஸ்களை வாங்கி ஜப்பானுக்கு ஏற்றுமதி செய்யும் ஒரு நிறுவனம் கடந்த ஆண்டில் ஒரு மில்லியன் டாலருக்கு வியாபாரம் செய்துள்ளது! மாதம் சுமார் பத்தாயிரம் பழைய ஜீன்ஸ்கள் அமெரிக்காவிலிருந்து ஜப்பானுக்குச் செல்கின்றன!

பாதிப்புக்குள்ளாகியிருப்பது புதிய ஜீன்ஸ் தயாரிப்பு! பிரபல ஜீன்ஸ் தயாரிப்பு நிறுவனமான லீவை ஸ்ட்ராஸ் இந்தப் பழைய ஜீன்ஸ் வியாபாரத்துக்கு எதிராக முணுமுணுத்துப் பார்த்தது. பிரயோஜனம் இல்லை! அமெரிக்காவில் எல்லா வற்றுக்குமே சுதந்திரம் அதிகம்!

– நன்றி : நியூஸ்வீக்

☛ நம்ம ஊர் புதிய ஜீன்ஸ், ஃபான்ஸி ஷர்ட்டில் பாலாஜி. ஜீன்ஸ், கௌபாய் ஷர்ட்டில் ஸ்ரீராம். உடைகள் உதவி : பெஹ்னாவ், ஃபவுன்டன் பிளாஜா. வண்ணப்படம் : யோகா.

# சிவகாமியின்




## நாற்பத்தோராம் அத்தியாயம்

# அஜந்தா குகையில்

புலிகேசியின் உணர்ச்சி மிகுதியையோ கண்ணீரையோ, கவனியாதவராய்ப் புத்தபிக்ஷு கீழ் வானத்தில் மிதந்து வந்த பூரண சந்திரனைப் பார்த்துக் கொண்டே மேலும் கூறினார் :

''அந்தக் கிராதகர்கள் என்னை நீ என்றே எண்ணிக் கொண்டு பிடித்துப் போனார்கள். வனப் பிரதேசங்களையெல்லாம் தாண்டி அப்பால் கொண்டு போனதும் என்னைக் குதிரை மேல் ஏறச் சொன்னார்கள். நான் குதிரை ஏறத் தெரியாமல் தவித்ததைப் பார்த்ததும் அவர்களுக்குச் சந்தேகம் உண்டாயிற்று. நான் பாசாங்கு செய்கிறேனோ என்று அவர்கள் முதலில் எண்ணினார்கள். பிறகு உண்மையாகவே எனக்குக் குதிரை ஏறத் தெரியவில்லையென்று அறிந்ததும் அவர்களுடைய தலைவன் என்னை என்னவெல்லாமோ கேள்விகள் கேட்டான். என்னுடைய விடைகளைக் கேட்டு அவர்கள் திகைத்தார்கள். உன்னுடைய காதுகளில் நீ குண்டலம் போட்டுக் கொண்டிருந்தாய். அதற்காகத் துவாரங்களும் இருந்தன. என் காதுகளில் துவாரமே இல்லையென்பதைப் பார்த்ததும் அவர்களுக்கு நான் நீ இல்லையென்பது நிச்சயமாய்த் தெரிந்து விட்டது. உன்னைப் பிடிக்க முடியாததனால் ஏற்பட்ட கோபத்தையெல்லாம் என்பேரில் காட்டி உபத்திரவப்படுத்தினார்கள். ஆ! அவர்கள் அப்போது சாட்டையினால் என்னை அடித்த அடியின் தழும்புகள் இதோ இன்னும் இருக்கின்றன!'' என்று புத்த பிக்ஷு தம் முதுகைத் தொட்டுப் பார்த்துக் கொண்டார்.

''ஐயோ! அண்ணா! அந்தத் தழும்புகளைப் பார்த்து எத்தனையோ நாள் நான் தூக்கமின்றித் தவித்திருக்கிறேன். ஆனால் அதையெல்லாம் எதற்காக இப்போது ஞாபகப்படுத்துகிறாய்?'' என்று புலிகேசி அலறினார்.

''தம்பி! உனக்கு ஞாபகப்படுத்தவில்லை. எனக்கு நானே ஞாபகப்படுத்திக் கொள்கிறேன். அதையெல்லாம் இன்றைக்கு எண்ணிப் பார்த்தால் எனக்கு மனக் கஷ்டம் உண்டாகவில்லை. குதூகலந்தான் உண்டாகிறது. பரோபகாரம் செய்வதில் உள்ள பலன் இதுதான். ஒருவருக்கு ஒத்தாசை செய்வதற்காக நாம் கஷ்டப்பட்டோமானால், கஷ்டம் அதை அனுபவிக்கும் போது மட்டுமே நீடிக்கிறது. சீக்கிரத்தில் அது போய் விடுகிறது. அப்புறம் வாழ்நாள் உள்ளவரை நாம் செய்த உதவியை நினைத்து நினைத்துச் சந்தோஷப்படுகிறோம். ஆனால், தம்பி! அந்தப் பழைய கதையையெல்லாம் இப்போது ஞாபகப்படுத்துவது உனக்கு ஒருவேளை மனக் கஷ்டத்தை உண்டாக்கினால் நான் சொல்லவில்லை'' என்று நாகநந்தி நிறுத்தினார்.

''அண்ணா, என்ன சொல்கிறாய்? எனக்கும் அந்தக் காலத்தை நினைத்தால் எத்தனையோ மகிழ்ச்சி உண்டாகிறது!''

''அப்படியானால் சரி. கொஞ்ச நேரம் வரையில் அந்தக் கிராதகர்கள் துன்புறுத்தியதையெல்லாம் பொறுத்துக் கொண்டிருந்தேன். பொறுக்க முடியாமற்போன பிறகு, நான் அஜந்தா புத்த சங்கிராமத்தைச் சேர்ந்தவன் என்று தெரிவித்தேன். உடனே அவர்கள் பயந்து விட்டார்கள். நான் அணிந்திருந்த உடைகள் எப்படிக் கிடைத்தன என்று கேட்டார்கள். பொய்கைக் கரையிலே அவை கிடைத்தனவென்றும், நான் அவற்றை வெறுமனே உடுத்திக் கொண்டு பார்க்க ஆசைப்பட்டு உடுத்திக் கொண்டதாகவும் சொன்னேன். என்னை அழைத்துக் கொண்டு திரும்பி அதே பொய்கைக் கரைக்கு வந்தார்கள். சுற்றியிருந்த வனப்

பிரதேசமெங்கும் தேடிப் பார்த்தார்கள். கடைசியில் ஏதோ காட்டு மிருகம் உன்னைக் கொன்று தின்றிருக்க வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டு என்னை விட்டு விட்டுத் திரும்பிப் போய்ச் சேர்ந்தார்கள். பிறகு, நீ வழி கண்டுபிடித்துப் பத்திரமாய்ப் போய்ச் சேர்ந்தாயோ என்னவோ என்ற கவலையுடன் நானும் அஜந்தாவை நோக்கிக் கிளம்பினேன்.''

**வா**தாபிச் சக்கரவர்த்தி அப்போது குறுக்கிட்டுக் கூறினார் : ''நீ சொல்லியிருந்த படியே நான் நதி வழியைப் பிடித்துக் கொண்டு போனேன். வளைந்து வளைந்து போன நதியோடு எத்தனை தூரம் போனாலும் மனித சஞ்சாரமே இல்லை. அடிக்கடி எதிரே சுவர் வைத்தது போல் மலை நின்று அப்பால் வழியே இல்லையென்று தோன்றியது. போகப் போக இப்படியே இருந்தது. ஒருவேளை நீ சொன்னதை நான் நன்றாய்த் தெரிந்து கொள்ளாமல் தப்பான வழியைப் பிடித்துக் கொண்டு போகிறேனோ என்று எண்ணினேன். அதைவிடப் பயங்கரமான எண்ணம் ஒன்று தோன்றியது. நீ ஒருவேளை என்னை ஏமாற்றி விட்டாயோ, சித்தப்பன் மங்களேசனிடம் போய்ச் சமாதானம் செய்து கொண்டு இராஜ்யம் ஆளப் பார்க்கிறாயோ என்று நினைத்தேன். கடைசியில் அஜந்தாவின் அற்புதச் சித்திரக் குகைகளை அடைந்தேன். நீ சொன்னபடியே அங்கு யாரோடும் பேச்சுக் கொடாமல் சிற்பியின் சீடனாக நடித்துக் காலங் கழித்துக் கொண்டிருந்தேன். ஒரு வாரங் கழித்து நீ வந்து சேர்ந்தாய். உன்னுடைய கதையைக் கேட்டு, உன்னுடைய முதுகிலிருந்த காயங்களையும் பார்த்து விட்டு, உனக்கு நான் மனத்தினால் செய்த அநீதியை எண்ணி 'ஓ'வென்று அழுதேன்....''

''தம்பி! என் விஷயத்தில் உன்னுடைய மனம் அப்போது கூட முழு நிம்மதி அடையவில்லை. சங்கிராமத்தின் தலைமை பிக்ஷு நம்மை ஒருநாள் சேர்ந்தாற்போல் பார்த்து விட்டார். நாம் நதியில் தனி இடத்திற்குச் சென்று குளித்துக் கொண்டிருந்த போது அவர் பார்த்தார். உன்னைப் பற்றி விசாரித்தார். நான் உண்மையைச் சொன்னேன். அஜந்தா சட்டத்துக்கு நேர் விரோதமாக அந்நியனாகிய உன்னை நான் அங்கே கொண்டு வந்ததற்காக என்னை எவ்விதம் தண்டிப்பாரோ என்று பயந்தேன். ஆனால், குரு என்னைக் கோபிக்கவும் இல்லை; தண்டிக்கவும் இல்லை. அன்று சாயங்காலம் அவருடைய தலைமை விஹாரத்தில் ஒருவரும் வராத சமயத்தில் நம்மை அழைத்து வைத்துக் கொண்டு நம்மைப் பற்றிய கதையைச் சொன்னார். அதைக் கேட்ட பிறகு உன்னுடைய மனநிம்மதி இன்னும் அதிகமாகக் குலைந்தது. தம்பி! என் விஷயமாக உன் உள்ளத்தில் பொறாமைத் தீ மூண்டு, வரவரப் பெரிதாகிக் கொழுந்து விட்டெரியத் தொடங்கியது.''

''ஆம், அண்ணா! அது உண்மைதான். ஆனால் அதே சமயத்தில் என்னுடைய நீச குணத்தைப் பற்றியும் நான் அடிக்கடி எண்ணமிட்டு வெட்கமடைந்தேன்.''

''உன் பேரில் தவறில்லை, தம்பி! சிறிதும் தவறில்லை. அப்போதும் நான் அவ்வாறுதான் எண்ணினேன். நீயும் நானும் இரட்டைப் பிள்ளைகள் என்றும், இரண்டு பேரில் நான் முதலில் பிறந்தவன் என்றும் தலைமைப் பிக்ஷு நமக்குத் தெரியப்படுத்தினார். நம் தந்தை நான் பிறந்தவுடனேயே என்னை அப்புறப்படுத்தி வைத்திருந்து ஐந்தாவது வயதில் என்னைப் பிக்ஷுவிடம் ஒப்புவித்தார். உன்னுடைய உயிருக்கு ஏதாவது அபாயம் நேர்ந்ததாகத் தெரிந்தால், அப்போது மட்டும் என்னைப் பற்றிய இரகசியத்தை வெளிப்படுத்தி என்னை இராஜ்யத்துக்குரியவனாகச் செய்ய வேண்டும் என்று சொல்லியிருந்தார். இதையெல்லாம் பிக்ஷு குரு நமக்குச் சொல்லி, உன்னை நானே காப்பாற்றும்படியாக நேர்ந்த விதியைக் குறித்து வியந்தார். என்னுடைய உத்தம குணத்தை வெகுவாகச் சிலாகித்தார். நான் பிறந்து அரை நாழிகைக்குப் பிறகு நீ பிறந்ததாகவும், ஜாதக ரீதியாக நீயே இராஜ்யமாளப் பிறந்தவன் என்று ஏற்பட்டபடியால் நம் தந்தை உன்னைச் சிம்மாசனத்துக்கு உரியவனாகத் தேர்ந்தெடுத்ததாகவும் கூறினார். இது தெரிந்ததும் உன் பேரில் எனக்கு ஏற்கெனவே இருந்த அன்பு பன்மடங்கு ஆயிற்று. ஆனால், அதே செய்தியினால் உன்னுடைய மனத்தில் விஷம் பாய்ந்து விட்டது. அந்த நிமிஷம் முதல் நீ என்னை மனத்திற்குள் துவேஷிக்கத் தொடங்கினாய். அதைக் குறித்து நான் ஆச்சரியப்படவில்லை; உன் பேரில் கோபங் கொள்ளவும் இல்லை. நியாயமாக வாதாபிப் பட்டத்துக்குரியவன் நான் என்று ஏற்பட்டபடியால் நீ என் பேரில் சந்தேகப்படுவது இயற்கை என்பதை உணர்ந்தேன். உன்னுடைய சந்தேகத்தை அறவே போக்கத் தீர்மானித்தேன். பிக்ஷு குருவின் காலில் விழுந்து என்னையும் பிக்ஷு மண்டலத்தில் சேர்த்துக் கொள்ளும்படி கேட்டுக் கொண்டேன். குரு முத

அமரர் **கல்கி**

வில் ஆட்சேபித்தார். கடைசியில் ஒப்புக் கொண்டார். உன்னுடைய முன்னிலையில் நான் தலையை மொட்டை அடித்துக் கொண்டு காவி வஸ்திரம் தரித்த புத்த பிக்ஷு ஆனேன். என்றென்றைக்கும் உலக வாழ்க்கையைத் துறந்து விட்டதாகச் சத்தியம் செய்தேன். உன் உள்ளத்தில் மூண்டிருந்த தீ அணைந்தது. முன்போல் என்னிடம் அன்பும் விசுவாசமும் கொண்டாய்.''

''அண்ணா! அது முதல் உன்னையே நான் தெய்வமாகக் கொண்டேன். எந்தக் காரியத்திலும் உன் இஷ்டப்படியே நடந்து வந்தேன். நீ சொன்ன சொல்லைத் தட்டி நடந்ததில்லை.''

''அதனால் நீ எவ்வித நஷ்டமும் அடையவில்லை, தம்பி! உன்னை அஜந்தாவில் விட்டு விட்டு நான் வெளியேறினேன். மூன்று வருஷ காலம் நாடெங்கும் சுற்றினேன். இராஜ்யத்தின் அதிகாரிகள், இராணுவத் தலைவர்கள் எல்லாரையும் உன்னுடைய கட்சியில் சேரச் செய்தேன். பொது ஜனங்களையும் மங்களேசனுக்கு எதிராகக் கிளப்பி விட்டுக் கொண்டிருந்தேன். பக்குவமான காலம் வந்த போது உன்னை அஜந்தாவிலிருந்து வரவழைத்தேன். பெரிய சைனியத்துக்குத் தலைமை வகித்து நீ வாதாபி நோக்கிச் சென்றாய். மங்களேசன் போரில் உயிரை விட்டான். நம்முடைய புகழ்பெற்ற பாட்டனார் சத்யாச்ரயப் புலிகேசி வீற்றிருந்து ஆட்சி புரிந்த சளுக்க சிம்மாசனத்தில் நீ ஏறினாய்.''

''அண்ணா! உன்னுடைய ஒத்தாசையினாலேதான் வாதாபிச் சிம்மாசனம் ஏறினேன். உனக்கு நியாயமாக உரிய சிம்மாசனத்தை நீ எனக்காகத் துறந்தாய். என் மனத்தில் சிறிதும் களங்கம் இருக்கக் கூடாது என்பதற்காக உலக வாழ்க்கையையே துறந்து பிக்ஷு ஆனாய். உன்னுடைய மகத்தான பிரயத்தனங்களினாலேதான் மங்களேசனைக் கொன்று நான் சிம்மாசனம் ஏறினேன். அதற்குப் பிறகு, இருபது வருஷ காலமாக நீ எனக்கு அன்னை, தந்தையாகவும், மதி மந்திரியாகவும், இராணுவ தந்திரியாகவும் இருந்து வந்திருக்கிறாய். இன்று நர்மதையிலிருந்து



வடபெண்ணை வரையில் வராகக் கொடி பறந்து வருவதெல்லாம் உன்னாலேதான். இதையெல்லாம் நான் ஒப்புக்கொள்கிறேன். ஒப்புக்கொண்டு உனக்கு நன்றி செலுத்துகிறேன். ஆனால், இந்தப் பழைய கதையையெல்லாம் எதற்காக இப்போது ஞாபகப்படுத்துகிறாய்? உன்னிடம் எனக்குள்ள நன்றியை எந்த விதத்திலாவது நான் தெரிவித்துக் கொள்ள இடமிருக்கிறதா?'' என்று புலிகேசி கேட்டு விட்டு ஆவலுடன் நாகநந்தியின் முகத்தை நிலா வெளிச்சத்திலே பார்த்தார்.

கொடுமையான விரதங்களினால் வற்றி உலர்ந்திருந்த பிக்ஷுவின் முகத்தில் புலிகேசி என்றும் காணாத கனிவு தென்பட்டது.





''அரசியல்வாதிகளுக்குப் பிடித்த 'சிடி' எது?''

''பப்ளிசிடி!''

''பிடிக்காத 'சிடி' எது?''

''சிம்ப்ளிசிடி!''

- சம்பத் குமாரி



மகள் : எதுக்குப்பா ரேஷன் கடையிலே ஒரு கிலோ 100 கிராம் அரிசி வாங்கிட்டு வரச் சொல்றீங்க?

தந்தை : அப்பத்தான் வீட்டுல வந்து உன் அம்மா நிறுத்துப் பார்க்கும் போது கரெக்டா ஒரு கிலோ இருக்கும், கோபிக்க மாட்டா!

- கவிட் ரவி

மனைவி : போன தீபாவளிக்கு நீங்க வாங்கிக் கொடுத்த பட்டுப் புடைவை நல்ல பட்டுதான்னு நிச்சயமாகத் தெரிஞ்சு போச்சுங்க......

கணவன் : எப்படி?

மனைவி : எவ்வளவு துணி போட்டாலும் ஒரு டம்ளருக்குமேல தராத எவர்சில்வர் பாத்திரக்காரன், அந்தப் புடைவைக்கு ஒரு பெரிய 'தூக்கு' குடுத்துருக்கான்னா பார்த்துக்குங்க!.....

- ஆர். ரகோத்தமன்



''ஆம்; தம்பி! நான் உனக்குச் செய்திருப்பதற்கெல்லாம் பிரதியாக நீ எனக்குச் செய்யக்கூடியது ஒன்று இருக்கிறது'' என்றார் பிக்ஷு.

''அப்படியானால் உடனே அதைச் சொல்லு. இருபத்தைந்து வருஷமாக உனக்கு நான் பட்டிருக்கும் நன்றிக் கடனில் ஒரு பகுதியையாவது கழிக்கிறேன்.''

''தம்பி! நீ வாதாபியை விட்டுப் புறப்படுவதற்கு முன்பே உனக்கு ஓர் ஓலை அனுப்பியிருந்தேனல்லவா? அதில் என்ன எழுதியிருந்தேனென்பது ஞாபகம் இருக்கிறதா?''

''எவ்வளவோ விஷயம் எழுதியிருந்தாய்; எதைச் சொல்கிறாய்?''

''காஞ்சி சுந்தரியை நீ எடுத்துக் கொள்; சிவகாமி சுந்தரியை எனக்குக் கொடு! என்று எழுதியிருந்ததைச் சொல்கிறேன்.''

''ஆமாம்; அதைப் பற்றி இப்போது என்ன?''

''அப்போது கேட்டதையே இப்போதும் கேட்கிறேன்.''

''அண்ணா! இது என்ன? காஞ்சி சுந்தரியைத்தான் நம்மால் கைப்பற்ற முடியவில்லையே?''

''காஞ்சி சுந்தரி உனக்குக் கிடைக்கவில்லை! ஆனாலும், சிவகாமியை எனக்குக் கொடு என்று கேட்கிறேன்.''

''அதெப்படி முடியும்? உண்மையில் மகேந்திர பல்லவனுடைய சபையில் அந்தப் பெண் நாட்டியம் ஆடிய போது நீ ஓலையில் எழுதியிருந்தது எனக்கு ஞாபகம் வந்தது. அவளை என்னுடன் அனுப்ப முடியுமா என்று பல்லவனைக் கேட்டேன். அவன் என்ன சொன்னான் தெரியுமா? கலை உணர்ச்சியேயில்லாத என்னுடன் அவள் வர மாட்டாள் என்று சொன்னான்! இப்போது மறுபடியும் திரும்பிக் காஞ்சி மீது படையெடுக்கச் சொல்லுகிறாயா?''

''வேண்டாம், தம்பி! மறுபடியும் படையெடுக்க வேண்டாம். காஞ்சி சுந்தரி உனக்குக் கிட்டவில்லை. ஆனால், சிவகாமி சுந்தரி எனக்குக் கிடைத்தாள். அவளைக் கொண்டு வந்தேன்.''

''என்ன? என்ன? உண்மையாகவா?''

''தம்பி! அவளுக்காகவே நான் உன்னைப் போல வேஷந் தரித்தேன். அவள் தந்தையின் உயிரைக் காப்பாற்றினேன். சிவகாமிக்காகவே படைத் தலைமை வகித்து மகேந்திர பல்லவனுடன் மணிமங்கலத்தில் போர் செய்தேன். அவளை முன்னிட்டே போரை நடுவில் நிறுத்தி விட்டுப் பின் வாங்கினேன்.''

''அண்ணா! எல்லாம் விவரமாகச் சொல்லு!'' என்று புலிகேசி கேட்க, நாகநந்தி தாம் மூன்று வருஷத்துக்கு முன்னால்



தென்னாட்டுக்கு வந்ததிலிருந்து செய்ததையெல்லாம் விவரமாய்க் கூறினார்.

**எ**ல்லாவற்றையும் கேட்ட புலிகேசி, ''அண்ணா! அந்த நாட்டியப் பெண்ணின் மீது உண்மையாகவே நீ காதல் கொண்டிருப்பதாகவா சொல்கிறாய்?'' என்று நம்பிக்கையில்லாத குரலில் வினவினார்.

''ஆமாம் தம்பி! சத்தியமாகத்தான்.''

''ஆனால், நீ அஜந்தாவில் புத்த குருவின் முன்னால் செய்த பிரதிக்ஞை என்ன ஆவது? நாடெங்கும் காவித் துணி அணிந்து ஸ்திரீலோலர்களாய்த் திரியுங் கள்ளப் பிக்ஷுக்களின் கூட்டத்தில் நீயும் சேர்ந்து விடப் போகிறாயா, அண்ணா?''

''தம்பி! இந்தக் கேள்வியை எதிர்பார்த்தேன். இதற்கு மறுமொழி சொல்லவும் ஆயத்தமாயிருக்கிறேன். ஆனால், இரண்டொரு வார்த்தையிலே சொல்ல முடியாது. விவரமாகச் சொல்ல வேண்டும். கேட்கிறாயா?''

''கட்டாயம் கேட்கிறேன். ஆனால், சொல்லத்தான் வேண்டுமென்று உன்னை நான் கட்டாயப்படுத்தவில்லை. உனக்கு இஷ்டமிருந்தால் சொல்லு; இல்லாவிட்டால் சொல்ல வேண்டாம்!'' என்றார் வாதாபிச் சக்கரவர்த்தி.

**உ**ண்மையில் மேற்படி விவரத்தைக் கேட்கப் புலிகேசியின் உள்ளம் துடிதுடித்தது. அதே கணத்தில் அவருடைய மனத்தில் அசூயையின் விதையும் விதைக்கப்பட்டது. இத்தனை நாளும் புத்த பிக்ஷுவின் இருதயத்தில் தன்னைத் தவிர வேறு யாரும் இடம்பெற்றதில்லை. அவருடைய அன்புக்கெல்லாம் தாமே உரியவராயிருந்தார். தம்முடைய நன்மையைத் தவிரப் பிக்ஷுவுக்கு வேறு எந்த விஷயத்திலும் கவலையும் கவனமும் இல்லாமலிருந்தது.

இவ்வளவு காலத்துக்குப் பிறகு இப்போது பெண் ஒருத்தி, நாட்டியக்காரி, அவருடைய உள்ளத்தில் இடம்பெற்று விட்டாள்! ''ஆம்! இப்போது என்னைக் காட்டிலும் அந்தப் பெண்ணிடந்தான் பிக்ஷுவுக்கு அபிமானம்! அவள் படுநீலியாயிருக்க வேண்டும்!'' என்று புலிகேசி தம் மனத்திற்குள் அசூயையுடன் எண்ணமிட்டார்.

(தொடரும்)

குளிர் காலம், ராத்திரி ஒரு ஃபுல் டம்ப்ளர் பாலையும் கொடுத்துட்டு அப்புறம் என்னைக் கோபிச்சுக்கிட்டா எப்படி....?

# பிஞ்சு மனத்தை நோக அடிக்காதீர்கள்!

“இன்னிக்குத்தான் புதியதாய்ப் படுக்கை விரிப்பைப் போட்டேன்... குழந்தையாச்சேன்னு பார்த்தா... வயசு ஆறாகிறது. இன்னும் புத்தி வரலை.. ராத்திரியே எழுப்பி எழுப்பி பாத்ரூம் போய் வந்து படுக்கச் சொல்லி... யாரால் ஆகிறது!''

- பல பெற்றோர்களின் அங்கலாய்ப்பு இது. தயவுசெய்து உங்கள் குழந்தைகள் முன்னிலையிலேயே இப்படிச் சலித்துக் கொள்ளாதீர்கள்.

'குழந்தை வளர்ந்த பிறகும் படுக்கையை ஈரப்படுத்தினால் கோபிக்காமல் கொஞ்சவா சொல்கிறீர்கள்...?' என்று பலர் சாடுவது புரிகிறது.

ஆனால், இந்தப் பிரச்னை உங்களுடையது மட்டுமல்ல, குழந்தையினுடையதும் கூட என்று உணர்ந்து அனுதாபத்துடன் அணுக வேண்டும்.

முதலில் குழந்தையின் மனநிலையைப் பற்றி நாம் தெரிந்து கொள்ள வேண்டும். நாம் பேசுகிற விஷயம் தன்னைப் பற்றித் தான் என்று அறியும் போது அது குற்ற உணர்வுடன் யோசிக்கவும் செய்கிறது. இவ்வாறு பெற்றோர் பேசக் கேட்ட ஒரு குழந்தை, தானாகவே ரகசியமாகப் பாட்டியின் புடைவையை, நீளமாக மடித்துக் கால் இடுக்கில் வைத்துக் கொண்டு தூங்கும் பழக்கத்தை மேற்கொண்டது! அதாவது, ஈரமானாலும் புடவையோடு போகட்டுமே என்ற எச்சரிக்கை உணர்வு!

ஆதரவாக அணைத்து, ஆரோக்யமான உரையாடல்களாலும், சில மருந்துகளாலும் குழந்தையின் மனநிலையை ஊக்குவிக்க வேண்டும்.

அதற்குச் சில ஆலோசனைகள் :

● எந்தச் சூழ்நிலையிலும் குழந்தையைக் கேலி செய்யாதீர்கள். தமாஷ் என்ற பெயரில் சில பெரியவர்கள் ''மூத்திரச் சட்டி'' என்று நையாண்டி செய்து குழந்தையின் பிஞ்சு மனத்தை நோகடிப்பார்கள். குழந்தையின் நண்பர்கள் மத்தியில் இவ் விஷயத்தைப் போட்டு உடைப்பவர்களும்

உண்டு. இது குழந்தைக்கு மேலும் மனச் சோர்வை (Mental depression) ஏற்படுத்தும்.

● இரவு ஏழு மணிக்குப் பிறகு நீர் அல்லது திரவ உணவுகளைக் (ஹார்லிக்ஸ், பூஸ்ட் போன்றவை) கொடுக்காதீர்கள். இந்த நிபந்தனை குழந்தைக்கு உறங்கும் நேரத்தில் ("Spinctre Control") கட்டுப்பாடு ஏற்படும் வரையில்தான். பிறகு தாராள மாகக் கொடுக்கலாம்.

● இருட்டில் பயங்கலந்த கற்பனை கள் கனவுகளாக உருவெடுக்கும் போது குழந்தை சிறுநீர் கழித்து விடும். வெளிச்சம் பயத்தைப் போக்கும். ஒரு ஜீரோ வாட் பல்பை எப்போதும் படுக்கை அறையில் எரிய விடுங்கள்.

● நள்ளிரவில் நீங்கள் குறட்டை விட்டுத் தூங்கினாலும் சிரமம் பாராமல் எழுந்து, ஒருமுறை குழந்தையை எழுப்பி டாய்லெட்டுக்கு அழைத்துச் செல்லுங்கள்.

● இரவில் படுக்கையில் சிறுநீர் கழித்திருந்தால், குழந்தையையே அந்தப் படுக்கை விரிப்பைத் துவைக்கச் சொல் லுங்கள். குழந்தையால் அது முடியாது எனில், நீங்கள் துவைக்கையில் உதவச் செய்யுங்கள். சிறுநீரின் வாடை அவனது எச்சரிக்கை உணர்வைத் தூண்டுவதுடன், தண்டனையும் உண்டு என்பதை அவனுக்கு உணர்த்தும். குழந்தை ஈரப்படுத்திய துணியை வேலையாட்களைக் கொண்டு துவைக்கச் செய்தால் அவர்கள் இரக்க மின்றிக் கேலி பேசக்கூடும். இதுவும் தவிர்க்கப்படுகிறது.

● ஒருநாள் படுக்கையை ஈரப்படுத் தாமல் இருந்தால் மறுநாள் காலையில் குழந்தையைத் தட்டிக் கொடுத்து, 'Good Morning' சொல்லி, முன்பே வாங்கி வைத் திருந்த பரிசுப் பொருள் ஒன்றைக் கொடுத்து அவனை வானளாவப் புகழுங்கள். 'ஹீரோ' அந்தஸ்தைப் பெற்ற பெருமையில் மேலும் எச்சரிக்கையுடன் நம்மையே எழுப்பி பாத் ரூமுக்கு அழைத்துச் செல்வான். ஒரு வாரம் தொடர்ந்து வெற்றி பெற்ற குழந்தைக்குப் பெரிய பரிசுப் பொருளைக் கொடுத்து அவனைப் பெருமைப்படுத்துங்கள்.

● மருந்துகள் : AMITRIPTYLINE Hcl. (AMILINE-TORRENT) என்ற மருந்து டாக்டர் பிரிஸ்கிரிப்ஷனில் கிடைக்கும். அதிகப் பிரச்னை உள்ள குழந்தைகளுக்கு (5-7 வயது) 25 மி.கி. மாத்திரை ஒன்று, படுக்குமுன், அதாவது இரவு எட்டு மணி அளவில் கொடுக்கவும். தொடர்ந்து 4 நாட்கள் கொடுத்த பிறகு, மேற்கொண்டும் பிரச்னை தொடர்ந்தால், 10 மி.கி. மாத்திரை ஒன்று முன்போல கொடுக்கலாம். ஒரு வாரத்தில் எல்லாம் சரியாகி விடும்.

ஆனால் டாக்டரின் அனுமதியின்றி மருந்துகள் கொடுக்கக் கூடாது. இதில் மிக வும் எச்சரிக்கையாய் இருக்க வேண்டும்.

- குழந்தை நல மருத்துவர் டாக்டர் ஜே. கே. சங்கர் கூறக் கேட்டுத் தொகுத் தவர் : டாக்டர் ஜே. ஆர். கிருஷ்ண மூர்த்தி.



# ஒரு கோடீஸ்வரன், ஒரு தீபாவளி...

இரா. முருகன்

சுந்தரம்தான் ஜெயித்தான். நான் கோனார் என்றேன். அவன் ராஜு என்றான். வந்தது ராஜுதான். 'தீபாவளிக்கு மூன்று நாள் லீவு' சர்க்குலரை எடுத்து வந்த போது இன்னும் ஒரு பீரியட்தான் பாக்கி.

'தோத்தியாடா?' சுந்தரம் கண்ணால் கேட்டான். கோபாலன் சார் பட்டாசுக் கடையில் உதிரி வெடி வாங்கித் தர வேண்டுமென்று பந்தயம். தீபாவளி சமயத்தில் பந்தயத்தில் தோற்பது கூட ஒரு சந்தோஷம்தான். கோபாலன் சார் கடையில் பட்டாசு அடுக்குகிற மாதிரி.

மாதா பிதா குரு தெய்வம். பட்டாசுக் கடை வைக்கிற வாத்தியார் இஷ்ட தெய்வம். கோபாலன் சார் தீபாவளிக்கு ஒரு வாரம் முன்னால் பள்ளிக்கூடத்துக்கு லீவு போட்டு விடுவார். அவர் வீட்டுத் திண்ணையில் 'அகிலாண்டம் பட்டாசு ஸ்டால்' போர்ட் ஏறும். அகிலாண்டம்மாள், ஒய்ப் ஆப் கோபாலன் என்று எழுதிய கள்ளிப் பெட்டிகள் சிவகாசியிலிருந்து லாரியில் வந்து இறங்கும். நாங்கள் சாயந்திரம் விளையாடப் போகாமல் 'இங்கே புகை பிடிக்கக் கூடாது' என்று கண்டிக்கிற அட்டைகள் எழுதுவோம். வாளியில் மண் நிறைப்போம். விலைப்பட்டியலைப் போட்டி போட்டுக் கொண்டு மனப்பாடம் செய்வோம்.

தீபாவளி, கோபாலன் சார் பட்டாசுக் கடை திறப்பதில் தொடங்குகிறது. ஊரிலிருக்கிற மூன்று சவுண்ட் சர்வீஸுகளும் 'ரோஜா மலரே ராஜகுமாரி' என்று இசைத்தட்டில் அழைத்து புரட்டா ஸ்டால், பேன்சி ஸ்டோர், துணிக்கடை, மளிகை விளம்பரங்களை வர்த்தக ஒலிபரப்பாக்குவதில் பரபரப்படைகின்றன. அவ்வப்போது போடுகிற தூறல் கூடப் பட்டாசு வாசத்தையும் பட்சண வாடையையும் பரப்ப...

அடுத்த எலக்ஷனில் அறிஞர் அண்ணா தான் வருவார் என்று பட்டாசுக் கடையில் பேசிக் கொண்டார்கள். அடுத்த தீபாவளிக்கு இந்தி நஹி!

கோபாலன் சார் கடையில் எனக்கு முன்னால் சுந்தரம் வந்திருந்தான். பட்டாசு வெடிக்கிற குரங்கை வெளிச் சுவரில் ஒட்டப் பசை தடவிக் கொண்டிருந்தார்கள்.

ரிக்ஷா நிற்கிற சப்தம். முதலில் குடை. கம்பளிப் போர்வை போர்த்திக் கொண்டு கோடீஸ்வரன் வாத்தியார் மந்திரவாதி போல உள்ளே உட்கார்ந்திருக்கிறது தெரிகிறது. ''கோபாலா, கடை ஆரம்பிச்சாச்சா, சபாஷ்...''

பையன்கள் எல்லாம் ஆளுக்கொரு திசையில் சிதறி ஓடியிருந்தார்கள். நான் மாட்டிக் கொண்டேன்.

''கோபாலா, நல்ல ஜுரம். டாக்டர் கிட்டே போறேன். பாங்குக்காரர் பிள்ளையைக் கொஞ்சம் கூட அனுப்பி வையேன்... அப்பா எங்கேடா இப்போ? மெட்றாஸா கல்கத்தாவா?...'' நான் உறைந்து போயிருந்தேன்.

கோடீஸ்வரன் சரியான நச்சு. மாதத்தில் நாலு நாள் காய்ச்சல், வயிற்றுப்போக்கு, வயிற்றுவலி... ரிக்ஷாவைப் பிடி. கூட ஒரு பையனையும். ஊரில் நாலு டாக்டர். எல்லோரையும் போய்ப் பார். ஒவ்வொருத்தரும் கொடுக்கிற பச்சை சிவப்பு மருந்தை சர்பத் மாதிரி குடி. ஒருத்தர் கொடுத்த பிரிஸ்கிரிப்ஷனை இன்னொருத்தரிடம் காட்டி 'இது இதுக்குத்தானா' என்று விசாரி 'தம்பி, தோளைக் கொடு... எறங்க முடியலே.'

டியூஷனுக்கு யாரும் போகாத வாத்தியார் இவராகத்தான் இருக்கும்.

''ராமு கொஞ்சம் சார் கூட போய்ட்டு வந்துடு. சார் சீக்கிரம் விட்டுடுவார்.'' அது கோடீஸ்வரனுக்கும் விடப்பட்ட கோரிக்கைதான். வியாபாரம் சூடுபிடிக்கிற நேரத்தில் சேல்ஸ்மேனை இழக்க யாருக்கு மனம் வரும்?

வேண்டா வெறுப்போடு ரிக்ஷாவில் உட்கார்ந்தேன்.

சின்னதாகத் தூறல் போட்டுக் கொண்டிருந்தது. வடக்குவாடி. சக்கர வண்டியில் காகிதப் பூ ஒட்டி கங்கா தியேட்டரில் 'தீபா

வளி ரிலீஸ் நவராத்திரி' என்று எழுதிக் கொண்டிருந்தார்கள். ''மதுரையில் ரிலீஸாகி நாலு மாசமாறது. இவங்களுக்கு இப்பத்தான் ரிலீஸாம்'' ரிக்ஷாக்கார நாச்சியப்பன் சொன்னான். ''என்ன சொல்லு... எங்க வீட்டுப் பிள்ளையாகுமா?'' ரிக்ஷா உள்ளே அண்ணா சிரிக்கிற படம். 'அண்ணா, இந்தியை விரட்டற மாதிரி இந்தக் கோமடீஸ்வரன் வாத்தியார் விஷயத்திலும் ஒரு வழி பண்ணக் கூடாதா?'



''ராமசுப்பிரமணியன் டாக்டர் வீட்டுலே நிறுத்துப்பா.'' கோமடீஸ்வரன் வாத்தியார் சொன்னார். சீட் விளிம்பில் தொற்றிக் கொண்டாற் போல உட்கார்ந்திருந்தார்.

தேரடிப் பிள்ளையார் கோயிலைக் கடந்து பக்கத்துச் சந்தில் திரும்பினால் டாக்டர் வீடுதான். இவரை விட்டு விட்டுப் பிய்த்துக் கொள்ள வேண்டும்.

கோவில் திண்ணையில் பிரமை பிடித்த மாதிரி ஒருத்தர். சுற்றி நான்கைந்து பேர். ''வா, கிளம்பு...'' விதவிதமான குரல்கள். மனிதன் அசையக் காணோம். மலங்க மலங்க விழித்துக் கொண்டு இரண்டு குழந்தைகள் கூடவே நின்றன.

''எலக்ட்ரிசிட்டி போர்ட்காரர் சார். கனாவுலே புள்ளையார் வந்து எங்கிட்டே வான்னாராம். நேத்திலேருந்து உட்கார்ந்துட்டிருக்கார். யார் கூப்பிட்டாலும் எழுந்திருக்கலே.'' - நாச்சியப்பன் சொன்னான்.

'இத்தனை பெரியவர்களாக இருக்கிறார்கள். குண்டுக் கட்டாகத் தூக்கிப் போக வேண்டியதுதானே பாவம் அந்தக் குழந்தைகள். தீபாவளி சமயத்தில் அப்பா இப்படி ஒரு விநோதமான பிரகிருதி ஆகியிருக்க வேண்டாம். பிள்ளையாரும்தான் இன்னும் நாலு நாள் கழித்துச் சாவகாசமாகக் கனவில் வந்திருக்கலாம். அதை விட உபயோகமாக என்றால் இந்தக் கோமடீஸ்வரன் கனவில் வந்திருக்கலாம்.'

டாக்டர் அறைக்குள் கோமடீஸ்வரன் சார் சப்தம். பெஞ்சில் உட்கார்ந்து கொண்டேன். வெளியே பட்டாசு வெடிக்கிற சப்தம். 'ஓய்யாங்...'' ஏராப்ளேன் வாணம் சீறி எங்கோ விழுகிறது. அது கோமடீஸ்வரன் சார் தலையில் விழ.

''சார், உங்களுக்கு ஹெல்த் ஒரு அப்சஷனாப் போச்சு.'' டாக்டர் சொல்லிக் கொண்டிருக்கிறார். ''போதாக்குறைக்கு இங்கே பிராக்டிஸ் பண்ற நாலு பேரும் உங்க ஸ்டூடண்டா வேறே போய்ட்டோம். அதுக்காக, ஒரு காய்ச்சல், தலைவலின்னா எல்லாரையும் பார்க்கணும்னு இல்லையே சார்... நான் கொடுத்தா என்ன, கன்னுக்கினியான் கொடுத்தா என்ன, கார்த்திகேயன் கொடுத்தா என்ன... ஒருத்தர் மருந்து சாப்பிட்டாலே நிச்சயம் குணமாயிடும்...''

''இல்லேப்பா... நான் உங்கிட்டே மட்டும்தான் வந்தேன்.''

''முதல்லயே எங்கிட்டயா சார்?''

''அதெல்லாம் இல்லப்பா.. ரெண்டு நாள் முன்னாடி கார்த்திகேயன்கிட்டே பேசிக்கிட்டிருந்தேன். இது இதப்பாரு... வச்சுக்குங்க சார்னான்... இன்னும் சாப்பிடலை... இது வந்து...''

''சார் நான் அதைப் பார்க்காமலேயே பேர் சொல்லட்டா... திங்கள் கிழமை வந்த மெடிக்கல் ரெப்ரஸென்டேடிவ் எங்க எல்லோரையும் பார்த்துட்டுத்தான் சார் போனார். இந்த சாம்பிள்தானே... சரியா...?''

டாக்டர் பிள்ளை போலிருக்கிறது. ஒரு சின்னப் பையன் உள்ளேயிருந்து வந்தான்.

''உங்க அப்பாவா?'' உள்ளே கை காண்பித்துக் கேட்டான்.

''எங்க வாத்தியார்.''

அவன் என்னிடம் மேலே பேசப் பிடிக்காமல் வெளி வாசலுக்குப் போய் விட்டான். பள்ளிக்கூடம் இல்லாவிட்டாலும் வாத்தியார்களுடன் சுற்றுகிற பையன்களை யாரால்தான் சகித்துக் கொள்ள முடியும்?

''அடுத்த வருஷம் ரிடையர் ஆகப் போறேம்பா. அப்புறம் கிராமத்துலே போய் செட்டில் ஆக வேண்டியதுதான். பிள்ளையா குட்டியா?''

அப்பாடா, அடுத்த வருடம் இந்தக் கோடீஸ்வரன் சார் நமக்கு வரப் போவதில்லை. அண்ணா தயவில் இந்தி பண்டிட்டும். உலகம் திடீரென்று பிரகாசமானது. டாக்டர் பையன் வாசலில் பூச்சட்டி வைத்துக் கொண்டிருந்தான்.

''உங்க கிட்டே வாங்க மாட்டேன் சார். அப்பா அம்மாக்கு மருந்து கொடுத்தா காசு வாங்குவாங்களா?''

வாத்தியார் வெளியே வந்தார். ''ஏறிக் கோப்பா... இந்தா மருந்து பாட்டில். பத்திரமா வச்சுக்க. வாங்கிக்கறேன்.''

அவர் வாயில் மருந்து நெடி அடித்தது. கண்ணில் சின்ன சந்தோஷம்.

''கார்த்திகேயன் டாக்டர் வீடு போகணுமா சார்?''

நான் நாச்சியப்பனை எரித்து விடுவது போல் பார்த்தேன். ''வேண்டாம்ப்பா... நேரே வீடுதான். அப்புறம் தம்பியை கோபாலன் சார் கடையிலே எறக்கி விட்டுடு.''

சுபாஷ் பஜாரில் ஏகப்பட்ட விளக்குகள். முருகன் ஜவுளி வாசலில் வழியோடு போகிறவர்களை வருந்தி வருந்தி அழைத்துக் கொண்டு நிற்கிறார்கள். ஒருவன் ரிக்ஷாவுக்குள் கைவிட்டு நோட்டிசைத் திணித்தான். 'மலிவான விலையில் டெர்லின்... கிரேப் மெடிரியல்....''

எல்லோரிடமும் டெர்லின் சட்டை இருக்கிறது. பெரும்பாலும் சந்தன நிறத்தில். இந்த வருடமும் என் டெர்லின் கோரிக்கை வீட்டுப் பெரியவர்களால் உறுதியாக நிராகரிக்கப்பட்டது. டெர்லின் போன பிறவியில் புண்ணியம் செய்தவர்களுக்கு. எனக்கு வேண்டிய துணிகளை பட்டா பட்டா டிசைன்களில் அசட்டு நீல, மஞ்சள் நிறங்களில் சப்ளை செய்யவே மூக்கையா செட்டியார் அவதாரம் எடுத்து இருக்கிறார். முழங்காலுக்கு மேலே வழிகிற டிராயரும் முழங்கைக்குக் கீழே தழைகிற சட்டையும் தைத்துக் கொடுக்கவே குருசாமி டெய்லர் இருக்கிறார். போன வாரமே கொளகொளவென்று தைத்து அம்மா ரவிக்கைகளோடு பிரிமனை மாதிரிச் சுற்றிக் கொண்டு வந்து கொடுத்து விட்டுப் போய்விட்டார். ''ஏதாவது மாத்தணும்னா இப்ப எடுத்து வந்துடாதீங்க. ஏகப்பட்ட துணி கிடக்கு. தீபாவளிக்கு அப்புறம் தாங்க'' - இது அம்மாவுக்கு. என் துணிகள் குருசாமியிடம் திரும்பப் போவதே இல்லை.

''என்ன தம்பி, தீபாவளிக்குத் துணி எல்லாம் எடுத்தாச்சா?'' கோடீஸ்வரன் சார் கேட்டார்.

''எடுத்துட்டாங்க சார். நீங்க எடுத்துட்டிங்களா சார்?''

காதிகடையில் தான் எல்லா வாத்தியார்களும் தீபாவளி சமயம் தென்படுவார்கள். ''ஜி.ஓ. வந்திருக்கு''. ஜி.ஓ என்றால் கவர்மெண்ட் ஆர்டர் என்று சுந்தரம் சொன்னான். தீபாவளிக்குக் கதர் சட்டைதான் போடவேண்டும் என்று ஏதாவது வாத்தியார்களை மிரட்டுகிற உத்தரவாக இருக்கும்.

''நான் தீபாவளி எல்லாம் கொண்டாடறதில்லேப்பா.''

ஆச்சரியத்தோடு அவரைப் பார்த்தேன். ராபர்ட் சார் இப்படிச் சொல்லியிருந்தால் ஆச்சரியமில்லை. அல்லது வக்கீல் ரங்கனாத அய்யரின் பிள்ளைகள். அவர்கள் வீட்டுக் கூடத்தில் தாடிக்காரர்கள் படம் மாட்டி இருப்பார்கள். ஒருத்தர் மார்க்ஸ் இன்னொருத்தர் பெயர் வேறு ஏதோ. அந்தப் பிள்ளைகள் தீபாவளி கொண்டாடுவதில்லை. இருப்பதில் பழைய சட்டையாகப் போட்டுக் கொண்டு தீபாவளியன்று காலையில், பட்டாசும் புதுத்துணியும் மணக்கும் தெரு நெடுக மெல்ல நடந்து போவதைத் தவறாமல் செய்வார்கள்.



### 300 லிட்டர் பதனீர் தரும் பனை!

❑ அண்மையில் தமிழ்நாடு வேளாண்மைப் பல்கலைக் கழகம் அதிக பதனீர் தரவல்ல பனை இரகம் ஒன்றைக் கண்டு பிடித்துள்ளது. மானாவாரியில் வறட்சியைத் தாங்கி வளரும் வல்லமை கொண்டது. இந்தப் பனை மரம் ஆண்டொன்றுக்கு 300 லிட்டர் பதனீர் தரும். சாதாரண நாட்டுரகப்பனை ஒன்றிலிருந்து 150 முதல் 200 லிட்டர் பதனீர்தான் கிடைக்கும்.

- ஆதாரம் : இந்தியன் எக்ஸ்பிரஸ்

தகவல் : ரமா ராமநாதன்

வாத்தியாரும் அப்படியா? இல்லை, அவர் வீட்டில் யாராவது இறந்து போய்.. அது இன்னும் கஷ்டம். யாரும் எழுப்பாமல் வெடிச்சப்தம் கேட்டு எழுந்து பல்கூடத் தேய்க்கத் தோன்றாமல் திண்ணையில் உட்கார்ந்து பக்கத்து வீடுகளில் பரபரப்பை ஏக்கத்தோடு பார்த்து......

கோடீஸ்வரன் சார் வீடு. பக்கத்து வீட்டில் எல்லாம் பிரகாசமாக விளக்கெரிய இவர் வாசல் மட்டும் இருளோ என்று கிடந்தது.

வாத்தியார் வாசலில் ஒரு நிமிஷம் நின்றார். கதவைத் திறந்து கொண்டு உள்ளே போனார். என்னை மறந்து விட்டார். ''போகலாம்''. நாச்சியப்பன் கிளம்பினான். ''ரயில் சவாரி வர்ற நேரம்.''

பத்தடி போயிருந்தபோதுதான் கையைப் பார்த்தேன். மருந்து! வாத்தியார் மறந்துவிட்டார். கண்டு கொள்ளாமல் விட்டுவிடலாமா? வேண்டாம், எல்லோரும் தீபாவளி கொண்டாடும்போது இவர் மட்டும் முக்கி முனகிக் கொண்டு ஜுரத்தில்.... அதைவிடக் கொடுமை என் வீட்டுக்கே வந்து விடக்கூடும் அவர்.

நான் ரிக்ஷாவிலிருந்து குதித்தேன். ''நீ போய்க்கோ நாச்சியப்பா.'' நாகனேரி மடத்துச் சந்து வழியாக ஓடினேன். வாத்தியார் வீட்டுக்கு குறுக்குவழி.

கோடீஸ்வரன் சார் வீட்டுக் கதவு அடைத்துத்தான் கிடந்தது. தள்ளினேன். திறந்து கொண்டது.

மங்கலான வெளிச்சம். வாத்தியார் எதையோ ஆற்றி எடுத்து டம்ளரில் ஊற்றுகிறார். கூடத்தின் கோடியில் கசங்கின படுக்கை, கட்டில். ஜமுக்காளம் வழிந்து தரையில் கிடக்கிறது. நடையில் சிறுநீர் வாடை. கட்டிலில் ஒருக்களித்துப் படுத்துத் தலையில் மடேர் மடேர் என்று அடித்துக் கொண்டிருந்த எலும்பு உருவம் அவர் மனைவியாக இருக்க வேண்டும்.

''போகணும்னு நெனச்சாலும் உசிரு போக மாட்டேங்குதே... துன்பம் தாங்க முடியல்லீங்க... நீங்க படற கஷ்டம் இன்னும் வேதனை.... வேண்டாங்க... எதுவுமே வேண்டாம்.. நான் போயிடறேன். இருந்து இருந்து உங்களுக்கு என்ன சுகத்தைக் கொடுத்தேன்... பாவி... போகணும்னு வேண்டிக்குங்க. சீக்கிரம் போயிடணும்... புத்து அரிக்க இன்னும் பாக்கி என்ன இருக்கு... நாளை எண்ணிக்கிட்டு... போயிடறேங்க.''

''சும்மா புலம்பிட்டிருந்தா எப்படி? போகணும்னு நினச்சாப் போக முடியுமா? வேளை வரவரைக்கும் இருந்துதான் ஆகணும். உன்னாலே எனக்கு ஒரு கஷ்டமும் இல்லை. பள்ளிக்கூடத்துலே பாடம் நடத்தற மாதிரி உனக்குச் செய்யறதும் எனக்குப் பிரியமான வேலைதான். இப்ப நான் கிடந்து துடிச்சுக்கிட்டிருந்தா, நீ செய்ய மாட்டியா என்ன? நீ பாரு.... அடுத்த தீபாவளிக்கு நீ எழுந்திருச்சு நடமாடத்தான் போறே... அது வரைக்கும் உனக்கு சிசுருஷை செய்ய எனக்குச் சக்தி வேணும். அதான் எனக்கு ஒரு காய்ச்சல், தலைவலின்னு வந்தாலும் ஓடிப்போய் எல்லா டாக்டரையும் பார்த்து... தப்புக் கணக்குதான்... ஒருத்தர்கிட்டே நாலுநாள்லே குணமாறது நாலுபேர் கிட்டே இன்னும் சீக்கிரம் குணமாகாதான்னு நப்பாசைதான். நான் படுக்கக் கூடாது. அதான் முக்கியம். பிள்ளை குட்டியா இருக்கு நம்மைப் பாத்துக்க? நாமதான்... நமக்கு நாமேதான்.'' வாத்தியார் குரல் உடைந்தது.

சுற்றும் முற்றும் பார்த்தேன். ஓரமாக மேஜை தெரிந்தது. மேலே நாலு அடுக்காக காம்போசிஷன் நோட்டுக்கள். மருந்து பாட்டிலை மேஜை மீது வைத்தேன். கூப்பிடலாமா? வேண்டாம்.

வெளியே வந்தேன். சில்வண்டு இரைந்தது. பையன்கள் பக்கத்துத் திண்ணையில் பாம்பு மாத்திரை கொளுத்திய புகை.

பீய்ஸ் பீய்ஸ் என்று விசிலோடு எங்கேயோ இங்க்லீஷ் நியூஸ் ரேடியோவில். ஒன்பது மணி. பத்து மணிக்கு கோபாலன் சார் திண்ணைக் கடையை எடுத்து வைத்துவிடுவார். இன்னும் இரண்டு நாள்தான் கடை.

தீபாவளி காலையில் புதுச்சட்டையில் கரிபூசிக் கொண்டு சுந்தரம் ஓடிவந்தான்.

''கோடீஸ்வரன் சார் வீட்டுலே ஒரே கூட்டம்டா... வாத்தியார் வீட்டு அம்மா போய்ட்டாங்களாம்.''

தீபாவளி அன்று யாராவது இறந்து போவார்களா? யாராவது அழுவார்களா? தெரியாது.

அப்படியே நின்று கொண்டிருந்தேன். மழை பெய்ய ஆரம்பித்திருந்தது.

37 ம் பக்கப் புதிர் விடைகள் :

1) ஜப்பான் 2) இந்தோனேஷியா 3) சிங்கப்பூர் 4) ஃபிலிபைன்ஸ் 5) தென் ஆப்பிரிக்கா 6) ஹாலந்து 7) அமெரிக்கா 8) ஹவாய் (அமெரிக்கா) 9) அலாஸ்கா (அமெரிக்கா).

## 15

அவளுடைய சிரிப்பைப் பார்த்ததும் தான் அதிகப்பிரசங்கித்தனமாகப் பேசி விட்டதாக மீராவுக்குக் கூச்சமேற்பட்டது.

''ஸாரி மேம்'' என்றாள் மன்னிப்புக் கேட்கும் குரலில். ''வம்புப் பேச்சுக்காக நான் சொல்லலே. உங்க ரெண்டு பேரையும் சேர்ந்து சந்தோஷமாப் பார்க்கும் போது எனக்கு ரொம்ப சந்தோஷமா இருந்தது.''

''உம்?'' என்று மகிழ்ச்சியுடன் லலிதாங்கி புருவங்களை வளைத்தாள். ''இருபது வருஷம் கழிச்சு மறுபடியும் சந்திச்சோம். சந்தோஷமா இருக்காதா?''

மீராவுக்கு ஏமாற்றமாக இருந்தது. இதற்கு மேல் இவர்களிடையே ஏதும் விஷயம் இல்லையென்றால் தன்னுடைய பார்வையும் கணிப்பும் கோளாறு என்று வருத்தமேற்பட்டது.

''ஓ, ஸாரி மேம்'' என்று அவள் முணுமுணுத்தது லலிதாங்கிக்குக் காதில் விழவில்லை என்று தோன்றிற்று. லலிதாங்கி ஏதோ பாட்டை முனகியபடி உள்ளே சென்று, ஒரு சின்னத் தட்டை எடுத்து வந்து அவளிடம் நீட்டினாள். தட்டில் இரண்டு



ஜாங்கிரிகள் இருந்தன. புன்னகையுடன், ''எடுத்துக்க'' என்றாள்.

''சொன்ன வாய்க்குச் சர்க்கரை கொடுக்கணும்னு சொல்வாங்க. சர்க்கரைக்குப் பதிலா ஜாங்கிரி.''

அவள் என்ன சொல்கிறாள் என்று விளங்காமலே மீரா ஒன்றை எடுத்துத் ''தாங்க்யூ'' என்றாள். அவள் தின்று முடிக்கிறவரை காத்திருந்து லலிதாங்கி ஒரு வெட்கச் சிரிப்புடன் சொன்னாள்.

''நானும் நாகராஜனும் கல்யாணம் செய்துக்கப் போறோம் மீரா.''

மீரா மகிழ்ச்சியுடன் கண்களை விரித்தாள். ''வாவ், க்ரேட்! கங்க்ராசுலேஷன்ஸ்

# வானவில்

மேம்!'' என்று லலிதாங்கியின் கையைக் குலுக்கினாள்.

லலிதாங்கியின் முகத்தில் இலேசாகத் தயக்கம் தெரிந்தது. ஆசிரியை என்கிற கம்பீர அங்கியைக் கழற்றி வைத்து விட்டவள் போல ஒரு பலவீனம் தெரிந்தது.

''மனசுக்குள்ளே ஏதோ படபடப்பு இருக்கு மீரா. இருபது வருஷத்துக்கு முந்தியே ஆகியிருக்க வேண்டிய கல்யாணம் இது. இத்தனை வயசுக்கப்புறம் அந்த ஆளையே செஞ்சுக்கப் போறேன்னு சொல்றது உறவுக்காரங்களுக்கு இளப்பமா இருக்கு.''

மீராவுக்கு இலேசான திகைப்பு ஏற்பட்டது. லலிதாங்கி தனது பீடத்திலிருந்து இறங்கி, சம வயதுக்காரியுடன் பேசுவது போன்ற நெகிழ்ச்சியுடன் தன்னிடம் பேசுவது நம்ப முடியாததாக இருந்தது. இவளுக்கு நெருங்கியவர்கள் யாருமில்லை என்ற பச்சாதாபம் எழுந்தது.

ஆதியும் அந்தமும் புரியாமலே, ''உறவுக்காரங்க என்ன சொன்னா என்ன மேம்?'' என்றாள் உத்வேகத்துடன். ''இது உங்க வாழ்க்கை! ஆனா, 'காட்'! இருபது வருஷமா ஒருத்தருக்காகக்காத்திருந்தீங்கங்கறது நம்ப முடியல்லே!''

லலிதாங்கி கூச்சத்துடன் சிரித்தாள். ''சினிமாக் கதை மாதிரி இல்லே?''

''இப்பல்லாம் சினிமாவிலே கூட எந்தப் பெண்ணும் காத்திருக்கறதில்லே.''

''நான் ஒரு லூஸ் கேஸ்தான்'' என்று லலிதாங்கி சிரித்தாள் சிநேகிதமாக. பிறகு சிரிக்காமல் தலையைக் குனிந்தபடி சொன்னாள். ''காத்திருந்தேன்னு சொல்ல முடியாது. நாகராஜனைக் கல்யாணம் செய்துக்க முடியாம போனதுக்கப்புறம், வேற யாரையும் கல்யாணம் செய்துக்கணும்னு தோணல்லே.''

மீரா பெரிய பிரமிப்புடன் மௌனமானாள். 'இப்படிப்பட்ட பெண்களை நீ அமெரிக்காவிலே பார்த்திருக்கியோ' என்று ஹரி முன்பு சொன்னது நினைவுக்கு வந்தது.

லலிதாங்கி தொடர்ந்து பேசிக்கொண்டு போகையில், அவள் வாஸ்தவத்தில் தனக்குள் எழும் சந்தேகங்களுக்குத் தானே பதில் தேடும் முயற்சியில் இருக்கிறாள் என்று தோன்றிற்று.

''உன்னை ஏமாத்திட்டு வேற ஒருத்தியைக் கல்யாணம் செய்துக்கிட்டுத் தலைமறைவாப் போனவனையா இப்பக் கல்யாணம் செய்துக்கப் போறேன்னு கேக்கறாங்க! நாகராஜன் என்னை ஏமாத்தினதா நான் நினைக்கல்லே. அவருக்கு எத்தனையோ நிர்ப்பந்தங்கள், பாவம். அப்பா அம்மாவை எதிர்த்துக்கிட்டுப் போக முடியல்லே. நா நாட்டியம் ஆடறவ. வேற ஜாதி. 'உனக்குக் கீழ ரெண்டு தங்கச்சிங்க இருக்காங்க. அவங்களுக்குக் கல்யாணமாக வேண்டாமா'ன்னாங்க பெரியவங்க. அப்பல்லாம் காதலுக்காக எதிர்த்துக்கிட்டுப் போறது ரொம்ப அபூர்வம். இப்பப் பாரு, இங்க கிளாசுக்கு வருவாளே கமலா, வீட்டிலே சொல்லாம யாரோடியோ போய் ரெஜிஸ்டர் கல்யாணம் பண்ணிக்கிட்டாளாம். அப்படியெல்லாம் இருபது வருஷம் முந்திப் பண்ண எங்க ரெண்டு பேருக்கும் துணிச்சல் இருக்கல்லே.''

கமலாவைப் பற்றிக் கேள்விப்பட்டு மீராவுக்குத் தாங்கவில்லை.

''கமலா, வீட்டுக்குத் தெரியாம ஏன் செஞ்சா?''

''அவங்க வீட்டிலே இஷ்டப்படல்லே. அந்தப் பையன் ஏழை போல!''

மீராவுக்கு இத்தகைய விளக்கம் ரொம்ப விசித்திரமாக இருந்தது. திகைப்பு நீங்காமல் தலையசைத்து, ''எனக்குப் புரியல்லே மேம்!'' என்றாள். ''அது அவளுடைய வாழ்க்கை. பெரியவங்க ஏன் தலையிடணும்?''

மகா அபத்தமான கேள்வி கேட்டது போல லலிதாங்கி அவளைப் பார்த்தாள்.

''இது அமெரிக்கா இல்லே கண்ணு. இங்கே பெரியவங்களை ஒதுக்கி வெச்சிட

வாஸந்தி

முடியாது. அதைத் தவிர சமூகத்திலே பல லெவல்கள் இருக்கு. ஒன்னுக்கொன்னு சேர விரும்பாமெ -''

''அதுதான் எல்லாத்தையும் விட முக்கியமான காரணம்னு படுது மேம்.''

லலிதாங்கி சிரித்தாள்.

''நீ ஒரு முற்றின பாவக்காதான்! அதான் நா உங்கிட்ட இதையெல்லாம் பேசிக்கிட்டிருக்கேன்.''

இன்னும் கமலாவைப் பற்றின சிந்தனையில் இருந்த மீரா, பேசாமல் அமர்ந்திருந்தாள்.

மீண்டும் என் கதைக்கு வருகிறேன் என்கிற ஆயத்தங்களுடன் லலிதாங்கி தொடர்ந்தாள்.

''நாகராஜன் மறுபடியும் வருவார். இத்தனை வருஷம் கழிச்சு என்னைக் கல்யாணம் செய்துக்கறேன்னு சொல்வார்னு நான் சத்தியமா நினைக்கல்லே.''

லலிதாங்கியின் முகத்தில் ஏற்பட்டுப் போன மாறுதல் அதிசயமாக இருந்தது. ஆவேசத்துடன் கட்டையைத் தட்டி 'வேகம் அசமஞ்சங்களா! வேகம்' என்று அதட்டும் ப்ரக்ருதி இல்லை இது. இவள் சதையும் ரத்தமும் உள்ள சாதாரண மனுஷி. இருபது வருஷங்கள் தன்னுள் ஏக்கங்களைப் புதைத்து வைத்திருந்தவள். வேறு ஒருத்தியைக் கல்யாணம் செய்து கொண்டு கம்பி நீட்டிய காதலனைக் கண்ணகியைப் போல் கரம் நீட்டி இப்பொழுது ஏற்றுக் கொண்டிருப்பவள். இவளுடைய ஆவேசமெல்லாம் கட்டையைத் தட்டி நட்டுவாங்கம் சொல்லியே கரைந்து போயிருக்க வேண்டும்.

''யார் நினைச்சாங்க, நாகராஜனுடைய மனைவி இறந்து, கடைசியிலே அவர் எங்கிட்டயே யாசகம் கேக்கறது போல வந்து நிப்பார்னு!''

மீரா பேசவேயில்லை. இடையில் நழுவிப் போன இருபது ஆண்டுகளைப் பற்றின நினைவே இவளுக்கு இல்லை என்று தோன்றிற்று.

''அவர் கேட்டதும் நீ ஒப்புத்துக் கிட்டியான்னு என் தங்கச்சி பழிக்கிறா. ரோசங்கெட்டவங்கறா. எனக்கொன்னும் அப்படியெல்லாம் தோணல்லே. அவரோட இருக்கும் போது எனக்குச் சந்தோஷமா இருக்கு. ரோசப்பட்டு நா எதுக்கு அதைப் பாழாக்கிக்கணும்? அவவ நல்லபடியா கல்யாணம் கட்டிக்கிட்டுச் சௌகர்யமா இருக்கா. எனக்கு நாற்பத்தி மூணு வயசிலே வாழ்க்கை அமைஞ்சா இவங்களுக்கு என்னங்கறேன்?''

மீராவுக்கு மிதமிஞ்சிய பச்சாதாபம் ஏற்பட்டது. இவளுக்கு ரோசம் தேவையற்றது. இந்த வீட்டில் தனியாக அமர்ந்து கட்டையைத் தட்டி நட்டுவாங்கம் செய்து இவள் அலுத்துப் போனவள். ஒரேயடியாய் இவள் நாட்டியத்துக்குக் கும்பிடு போட்டால் ஆச்சரியமில்லை.

அவள் சட்டென்று ஞாபகம் வந்தவளாய்க் கேட்டாள்.

''கல்யாணம் ஆன பிறகு அமெரிக்கா போய் விடுவீங்களா மேம்?''

''ஆமாம் கண்ணு. அங்கே இருக்கிற சௌகரியத்தைப் பார்த்து அங்கேயும் கிளாஸ் ஆரம்பிப்பேன். இந்தத் தொழிலையும் கலபமா மறக்க முடியாது.''

மாணவிகள் வர ஆரம்பித்து விட்டார்கள். வழக்கம் போல் வகுப்பு துவங்கி விட்டது. கட்டை இன்று வீர்யமே இல்லாமல் ஒலித்தது. மனத்தளவில் லலிதாங்கி இப்பொழுதே மாணவிகளிடமிருந்து கழன்டு கொண்டு விட்டது போலிருந்தது. வகுப்பு முடிந்ததும், லலிதாங்கி மாணவிகளிடம் சொன்னாள். ''அநேகமா அடுத்த கிளாஸ்தான் நா எடுக்கற கடைசி கிளாஸா இருக்கும் பிள்ளைங்களா.''

''ஏன் மேம்? ஏன்?'' என்று மாணவிகள் கேட்க ஆரம்பித்ததும் மீரா கிளம்பித் தெருவுக்கு வந்தாள். லலிதாங்கியிடம் இனிமேல் நாட்டியம் பயில முடியாது என்பது வருத்தமாக இருந்தது.

'இப்படிப்பட்ட பெண்களை நீ அமெரிக்காவிலே பார்த்திருக்கியா?' ஹரி கேட்டது மீண்டும் நினைவுக்கு வந்தது.

ஒப்பிட்டுப் பார்ப்பது முட்டாள்தனம்



என்று தோன்றிற்று. அது வேறு உலகம். 'காட்'! இங்கு இன்னும் எத்தனை வருஷங்கள் இருந்தாலும் எனக்கு இங்கிருக்கும் முரண்பாடுகள் விளங்கப் போவதில்லை.

விளங்கலாம். ஆனால் மனசு ஏற்காது என்று அவள் தனக்குள் சொல்லிக் கொண்டாள். வீடு நோக்கிச் செல்லும் போது இன்று திடீரென்று தனக்கு வயதாகிப் போனது போல் இருந்தது. எதையும் கேள்வி கேட்டு, எடை போட்டு லாபமில்லை என்று சோர்வு ஏற்பட்டது. எந்தக் கேள்விக்கும் ஒரே பதில் இல்லை. சாவு எனக்கு அஸ்தமனம் என்றால், தனக்கு அது வெளிச்சமாக இருக்கலாம் என்கிறான் ஹரி. 'ஒரு இருட்டிலிருந்து இன்னொரு இருட்டு...' ஏன் இன்று அவன் அப்படிப் பேசினான்?

திசை தெரியாத இருட்டு. இன்று பார்ட்டியில் உணர்ந்த இருட்டும் அடிவயிற்றில் கப்பிய பயமும் மீண்டும் நினைவுக்கு வர, உடம்பு நடுங்கியது. சங்கரிடமிருந்து, மூர்க்கமாகத் தன்னை விலக்கிக் கொண்டு வெளியேற முடியாமல் போயிருந்தால் என்ன ஆகியிருக்கும்...!

''சிலதுங்க அழுதுரும்'' என்று அலட்சியத்துடன், அலுப்புடன் அவன் சொன்னான். 'அனாவசியமாக ஃபஸ் செய்யும் அசட்டுப் பெண்கள்' என்பது போல. அவனுடைய மிருகத்தனமான பிடியும் பலமும் முகத்தின் விகாரமும் புதிதாக நினைவுக்கு வந்து அதிர்ச்சியைத் தந்தன.

''அழுதுரும்'' அவ்வளவுதானா? வெறும் அழுவதுடன் முடிந்து போகுமா இத்தனை பெரிய குற்றம்?

அவளால் நம்ப முடியவில்லை. அமெரிக்காவில் டீ.வி.யில் அடிக்கடி 'ரேப்' கேஸ்களைப் பற்றிச் செய்தி வரும். புயல் கிளம்பும். விசாரணைகளைக் காட்டுவார்கள். 'ரேப்பு'ன்னா என்ன என்று அம்மாவையும் டீச்சர்களையும் விளக்கம் கேட்டுத் தெரிந்து கொண்டிருக்கிறார்கள் அவளும் மகேஷும். மனுஷத்தனம் அற்ற குரூரம், கொலைக் குற்றத்துக்குச் சமானம் என்று விளக்கம் பெற்றிருக்கிறார்கள்.

'இப்படிக் கூச்சல் போடுபவர்களிடையேதான் குரூரமும் அதிகம்' என்று அப்பா அமெரிக்கச் சமூகத்தை அம்மாவிடம் விமர்சித்தது இப்போது திடீரென்று ஞாபகம் வந்தது.

இன்றைய அனுபவத்தை அவரிடம் சொன்னால் நம்பக் கூட மாட்டார். மிஸஸ் செல்லப்பன் நம்பாதது போல. நம்பினாலும் 'இனிமே அப்படிப்பட்ட பார்ட்டிகளுக்குப் போகாதே' என்பதோடு பிரச்னை முடிந்ததாக நினைப்பார்.

மீரா வீட்டை அடைந்த போது மகேஷ் அப்பாவும் அம்மாவும் சனீச்வரன் கோவிலுக்குப் போயிருப்பதாக அமெரிக்க உச்சரிப்பு மாறாத ஆங்கிலத்தில் சொன்னான்.

அவள் சோர்வுடன் படியேறித் தன் அறைக்குச் சென்றாள். அம்மாவும் அப்பாவும் கோவிலுக்குப் போய் என்ன வேண்டுகிறார்கள் என்று அவளுக்கு எரிச்சல் வந்தது.

திடீரென்று துக்கம் குமுறிக் கொண்டு வந்தது. உடுப்பைக் கூட மாற்றாமல் கட்டிலில் குப்புறப்படுத்துத் தலையணையில் முகத்தைப் புதைத்ததும் அழுகை பீறிட்டுக் கொண்டு வந்தது. அணை உடைந்தது போல, பிரளயம் மூண்டது போல், கண்ணீர் பிரவாகமாய்ப் பெருகிற்று. அதை நிறுத்த ஏதும் பிரயாசைப்படாமல் அழுவதன் சுகத்தில் அவள் லயித்துப் போனாள்.

'மீரா' என்ற அம்மாவின் குரல் படியேறி வந்தது. அவள் சட்டென்று எழுந்து குளியலறைக்குச் சென்று முகத்தைக் குளிர்ந்த நீரில் வேகமாகக் கழுவி முகத்தைத் துடைத்துக் கொண்டு வரும் போது அம்மாவும் அப்பாவும் அறைக்குள் நின்றிருந்தார்கள்.

''என்னது, அழுதியா என்ன?'' என்றாள் அம்மா அதிர்ச்சியுடன்.

மீரா சிரிக்க முயன்ற போது மீண்டும் அழுகை வெடித்தது. ''என்னம்மா, என்ன ஆச்சு?'' என்று அப்பா அருகில் வந்ததும் அவருடைய மார்பில் முகத்தைப் புதைத்து அவள் அழ ஆரம்பித்தாள்.

''எனக்கு இங்கே பிடிக்கவே இல்லே. ஹரி மட்டும் இல்லேன்னா இந்தியா வெறுத்துப் போயிருக்கும்.''

''யாரும்மா அது, ஹரி?''

''அதான், அந்தக் குருட்டுப் பையன்'' என்று அம்மா சொன்னது இன்று மீராவைக் கோபப்படுத்திற்று.

(தொடரும்)



''வர வர லீவு போடறதுக்கு இன்ன தான் காரணம் எழுதறதுன்னு ஒரு விவஸ்தையே இல்லாமப் போச்சு''

''ஏன் ஸார், கோபப்படறீங்க?''

''பின்ன, என்னய்யா, சார்க் மாநாட்டுக்குப் போகணும்னு காரணம் காட்டியா லீவு லெட்டர் எழுதறது....?''

- ஆர். அப்துல் சலாம்




# புனலாய் மாறி

**ஹேமலதா**

சுரேந்திரன் மிகவும் வேதனைப் பட்டான்.

'கல்யாணத்திற்கு முன்பு வரை எவ்வளவு ஜாலியாக இருந்தேன்! சுதந்திரமாய் எங்கு வேணுமானாலும் போனேனே. கேள்வி கேட்பார் கிடையாதே. இப்ப என்னடான்னா இந்த சுமதியைக் கல்யாணம் செஞ்சுக்கிட்ட பிறகு நிலைமை தலைகீழாய் மாறி விட்டதே. பெண்டாட்டி வேலைக்குப் போகாமல் இருந்தால் இது வந்திருக்குமா?

சுரேந்திரன் தன்து ஒன்பது மாத மகன் விக்ரமை பாத்ரூமில் வைத்துத் தொடை, இடுப்புக்குக் கீழ் சுத்தப்படுத்தினான். விக்ரம் அழுது கொண்டே இருந்தான். தொட்டிலில் அவனைப் படுக்கப் போட்டான். அவனுக்கு வயிற்றுப்போக்கு. தரையில் மலம் சிதறிப் போய்த் திட்டுகளாய்க் கிடந்தது. சுரேந்திரன் கழுவித் துடைத்தான். கைகளைச் சுத்தம் செய்து கொண்டான்.

'சுமதி ஆபீஸ் போகிற வரைக்கும் நல்லாதானே இருந்தான். இப்ப ஏன் திடீர்னு இப்படி? இதை எடுக்கிறது, கழுவி விடறது எல்லாமே பொம்பளைங்க வேலை. என் தலையெழுத்து. இப்ப நான் செய்யுறேன். சே, என்ன அசிங்கம். இதுவா வாழ்க்கை?'

சுரேந்திரன் மனம் வெறுத்தான்.

சுமதிக்கு ஆபீஸில் ஆடிட் பார்ட்டி வந்திருந்தது. ஒரு வாரமாகக் காலையில எட்டு மணிக்குப் போய் விட்டு ராத்திரி எட்டு மணிக்குத்தான் வருகிறாள். சமையல் மட்டும் செய்து விட்டுப் போவாள். சுரேந்திரன்தான் ரமாவைக் குளிப்பாட்டி, இட்டிலி ஊட்டி, டிரஸ் செய்து யு.கே.ஜி. கிளாஸில் அவளைக் கொண்டு விட்டு வரவேணும். பிறகு விக்ரமைக் கவனிக்க வேண்டும். மத்தியானம் ரமாவுக்கு இவன் தான் சாதம் ஊட்டி விடப் போக வேண்டும். சுமதி பழக்கப்படுத்தி இருந்தாள். இவன் அம்மாவும் கிராமத்துக்குப் போய் விட்ட நிலையில் ரொம்ப திண்டாட்டமாகி விட்டது. சுரேந்திரன் தன் ஆபீஸுக்கு லீவு போட்டு விட்டான். ஒரு வாரத்துக்கு மேலாகி விட்டது. சுமதிக்கு இன்னும் மூன்று நாள் டைட் ஒர்க்காம்.

'அட! மறந்தே போயிட்டேனே. வந்தா கோபிப்பாளே!'

பாத்ரூம் பக்கம் போனான் சுரேந்திரன். அங்கே மூலையில் சுமதி துவைத்து வைத்திருந்த அவள் சேலை, ஜாக்கெட், உள் பாவாடை மற்றும் விக்ரமின் துணிகள் பக்கெட்டில் இருந்தன. கொடியில் காயப் போடச் சொல்லி விட்டுப் போயிருந்தாள்.

'பேசாம இதையெல்லாம் அவளே செஞ்சுட்டுப் போயிருக்கலாமில்ல. பிள்ளையை வேற பாட்டி மாதிரி நான்தான் கவனிக்கிறேன்' - வெறுப்பாகத் துணிகளைக் காயப் போட்டுக் கொண்டிருந்தான். வீட்டருகே தெருவில் நடந்து போனவர்கள் இவனை ஒரு மாதிரியாகப் பார்த்துக் கொண்டு, குசுகுசுவெனப் பேசுவதையும் கவனித்தான். தன் கௌரவத்தையே கொடியில் தான் காயப் போட்டு விட்டாற்போல் துடித்தான்.

'வரட்டும் அவள்.'

தொட்டிலில் விக்ரம் இன்னும் அழுது கொண்டிருந்தான். எவ்வளவு ஆட்டியும் அவன் தூங்கவில்லை. அவனைத் தூக்கினான். அப்படியே கைகளில் மறுபடியும் பிசுபிசுப்பு. சுரேந்திரனுக்கு வெறுப்பு உச்சத்



தில் ஏறியது. ஏனென்றால் இது மாதிரி அவன் தன் மகனைச் சுத்தம் செய்தோ, துடைத்து விட்டோ சிறிதும் இதுவரை அனுபவப்படவில்லை. விக்ரமை அவன் கொஞ்சி மட்டுமே பழக்கப்பட்டவன்.

'இனியும் சும்மா இருக்கக் கூடாது. சுமதியை வரச் சொல்லி விட வேண்டியது தான். பிள்ளையைக் கவனிக்க இனி நம்மால முடியாது.' - மகனின் அழுகை அவனை இம்சைபடுத்தியது. விக்ரமை பாத்ரூமுக்குக் கொண்டு போய் முரட்டுத்தனமாகச் சுத்தம் செய்தான்.

விக்ரமின் அழுகையும் கூடியது. மீதிருந்த பாலைக் குடிக்க வைத்தான். விக்ரம் மெதுவாகக் கண் அயர்ந்தான். இதுதான் சமயம் என வேகமாக போன் செய்ய ஓடினான். விக்ரம் சதா அழுது கொண்டிருப்பதாயும் உடம்பு சரியில்லை என்றும் உடனே லீவு போட்டு வரும்படியும் சுமதியிடம் பேசினான்.

பதிலுக்கு அவள் சத்தம் பெரிதாய் போனில் வெடித்தது.

''என்னங்க சொல்றீங்க? நான் எப்படி வர முடியும்? விவரம் புரியாம பேசறீங்களே? ஆடிட் பார்ட்டி இப்ப என் மூஞ்சிக்கு நேரா உக்காந்து இருக்காங்க. என் நெலமை உங்களுக்குத் தெரியாதா? அறிவு இல்லாம பேசாதீங்க. கொஞ்சம் சமாளிங்க!''

டக்கென்று போனை வைத்து விட்டாள்.

சுரேந்திரனுக்குச் சூடு ஏறியது. ரத்தம் கொதித்தது. அவமானம் பிய்த்துத் தின்றது.

எவ்வளவு கேவலமாய்ப் பேசி விட்டாள்?! வரட்டும் அவள். நேரில் பார்த்து... சுரேந்திரன் மனம் பூராவும் நெருப்பு அலைகள் வீசின.

அவன் ஒரு முடிவுக்கு வந்து விட்டான்.

'நீ வேலைக்குப் போறதினாலதானே இப்படி 'சீப்'பா என்னைப் பேசுற; மதிக்கிற. வீட்லயும் பொம்பள மாதிரி நான் வேலை செய்யிறேன். நாளைக்கு உன் வேலையை ராஜினாமா செய்ய வைக்கிறேன். அப்புறம் பாப்பம் உன் திமிரை. ஆம்பளைன்னா அவ்வளவு இளக்கிரையாப் போயிட்டேனா?'

இரவு ஒன்பது மணிக்குத்தான் சுமதி வீடு திரும்பினாள். பூகம்பத்தை வாய் வழியாகக் கொப்பளித்து விட சுரேந்திரன் துடித்தான். அக்னிப் பார்வை அலைகளை முன் செலுத்தியபடியே அவளை நெருங்கினான்.

அருகில் வந்ததும் முதலில் சுமதி சொன்னாள்.

''என்னை மன்னிச்சிடுங்க. நான் அப்படிப் பேசியிருக்கவே கூடாது. தப்பு என் மேலதான். ஒரே டென்ஷன்ல இருந்தேன். அதான் அப்படி. நாளைக்கிலேர்ந்து நான் ஃப்ரீதான். ஆடிட் ஓவர். பத்து நாள் லீவு சொல்லிட்டேன். இவ்வளவு நாள் பொறுமையா வீட்டைக் கவனிச்ச உங்களை நினைச்சாலே பெருமையா இருக்கு. நான் நினைக்காத வாழ்க்கை. இலக்கணத்தை நீங்கதான் எனக்குக் கத்துக் குடுத்திருக்கீங்க. வீட்ல முன்பு ஒரு சிறு துரும்பு கூட அசைக்க மாட்டீங்க. இப்ப என்னடான்னா ஆண்மைக்கே உதாரணம் காட்டிட்டீங்க!''

சுரேந்திரனின் மனக் காயங்கள் மறைந்தே போயின. வெடிக்கும் ரத்த நாளங்கள் ஒடுங்கின. அவளை நெஞ்சோடு இதமாக அணைத்துக் கொண்டான். சுமதி கண்களில் நீர் முட்டியது. அவன் துடைத்தான்.

நம்மில் யாவர்க்கும் வெளிச்சமாய் ஒரு மறுபக்கமும் உண்டு. அதை நம்மால், நாமாகவே தரிசிக்க முடியாது.

# மகாமகத்துக்கு முன்னேற்பாடுகள்





ரவிச்சந்திரன் குடும்பம்

**ப**டைப்புக் கடவுளாகிய பிரம்ம தேவன் ஒருமுறை சிவபெருமானைச் சந்தித்து ''ஈசனே உலகில் பிரளயம் வரும் போது எனது சிருஷ்டித் தொழிலும் அழிந்து விடும். அந்த நிலையில் உயிர்களைப் படைக்கும் என் பணி தடைப்படுமே!'' என்று கவலைப்பட்டார். உடனே ஈசன், ''கவலைப்பட வேண்டாம். மண்ணையும், அமுதத்தையும் சேர்த்து ஒரு குடம் தயாரித்து, குடத்தில் அமுதத்தை நிரப்பி, சுற்றிலும், வேதங்கள், புராணங்கள், இதிகாசங்கள் போன்றவற்றை வைத்து, நடுவில் சிருஷ்டி பீஜத்தையும் வைத்து, தேங்காய், மாவிலைகளால் மூடி, மேரு மலையில் வைப்பாயாக. பிரளயம் வருங்கால் அக்குடமானது வெள்ளத்தில் மிதந்து சென்று ஒரு இடத்தில் தரை தட்டி நிற்கும். அப்போது யாம் அவதரித்து ஆவன செய்வோம்'' என்று பதிலுரைத்தார்.

பிரளய காலம் வந்தது. மேரு மலையில் வைக்கப்பட்டிருந்த அமுத கலசமானது வெள்ளத்தில் மிதந்து வந்து தெற்கே தரை தட்டி நின்றது. அப்போது வேடன் வடிவில் தோன்றிய சிவபெருமான், அம்பினால் குடத்தை உடைக்க, அதிலிருந்த அமுதம் நாற்புறமும் சிந்தியது. பிரம்மனின் படைப்புப் பணியும் தொடர்ந்தது.

கும்பம் தரை தட்டியதால் அந்த இடம் கும்பகோணம் ஆயிற்று. அமுதம் சிந்திய இடம்தான் புனித மகாமகக் குளம். இப்படிப்பட்ட புராணச் சிறப்பு வாய்ந்த குளத்தில் மகாமகத் தினத்தன்று குளிப்பது மிகப் பெரிய புண்ணியம்.

கிரஹ சஞ்சாரப்படி குரு, சிம்ம ராசியில் (சூரியனின் வீடு) இருந்து புறப்பட்டு மீண்டும் சிம்மராசிக்கு வர, பன்னிரண்டு வருடங்கள் ஆகும். அப்படி சிம்ம ராசிக்குக் குரு வரும் சமயம் சூரியன் கும்ப ராசியில் இருக்க வேண்டும்; அன்று மக நட்சத்திரமாகவும், பௌர்ணமியாகவும் இருக்க வேண்டும். இப்படிப்பட்ட அபூர்வ சேர்க்கை, பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை, மாசி மாதத்தில் அமையும். அந்த



சேஷாத்திரி சாஸ்திரிகள்



ராதா



எம். எல். ஏ. ராமநாதன்

மகாமகக் குளத்தில் தூர் எடுக்கும் பணி





சங்கரன் - விசாலாட்சி



● சண்முக ராஜேஸ்வரன் - ஆட்சியாளர்

நாளைத்தான் மஹாமகம் அல்லது மாமாங்கம் என்பர். சில வருடங்களில் மேற்குறிப்பிட்ட கிரஹ சஞ்சாரம் பதினோரு ஆண்டுகளிலே கூட ஏற்பட்டிருக்கிறது. அப்படி வருவதை இள மாமாங்கம் என்று சொல்வார்கள்.

சுபதினமான மஹாமக நாளன்று, அனைத்துப் புனித நதிகளும் இங்கே வந்து கலப்பதாக ஐதீகம் இருக்கிறது. மாமாங்க தினத்தில் ரிஷப லக்கின நேரம்தான் புண்ணியமானது என்று கருதப்படுகிறது. இந்த முறை பிப்ரவரி மாதம் 18 ஆம் தேதி காலை 11.45 முதல் 12.30 வரை, புண்ணிய காலம் என்று வரையறுக்கப்பட்டிருக்கிறது.

மகாமகத்தன்று புனித குளத்தில் நீராடினால், கங்கையில் பத்தாயிரம் முறை குளித்ததற்குச் சமம் என்று சொல்கிறார்கள். இந்தக் குளத்தை ஒருமுறை சுற்றி வந்தால் பூமியை நூறு முறை சுற்றி வந்த பலன் கிடைக்குமாம். இக் குளத்தை ஒருமுறை கைகூப்பி வணங்கினால் எல்லாத் தெய்வங்களையும் தினமும் கைகூப்பி வணங்கியதற்குச் சமமாகும். ஸ்ரீ ராமர் இக் குளத்தில் குளித்ததாலும், சிவலிங்கத்தை வைத்துப் பூஜை செய்ததாலும் இராவணனை வெல்ல முடிந்தது என்று புராணத்தில் கூறப்பட்டுள்ளது. இப்படிப்பட்ட புண்ணிய குளத்தில் மகாமகத் தினத்தன்று நீராட லட்சக்கணக்கான மக்கள் வருவதில் வியப்பில்லை.

மகாமகத்துக்காகக் கும்பகோணம் தயாராகி வருகிறது. குளத்தில் தூர் எடுக்கிறார்கள். சேறும், சகதியும் அகற்றப்படும். பின்னர் மணல் பரப்பித் தண்ணீர் நிரப்புவார்கள். காவிரியிலிருந்து குளத்துக்கு நேரடியாகத் தண்ணீர் வரும். முழங்கால் அளவுக்குத் தண்ணீர் மட்டுமே குளத்தில் சேர்த்து வைக்கப்படும். மகாமகக் குளத்தில் புனித நீராடி விட்டு, பொற்றாமரைக் குளம், மற்றும் காவிரியிலும் தலை மூழ்க வேண்டும் என்பது ஐதீகம். மகாமகத்தை ஒட்டி ஸ்பெஷலாக மேட்டூரில் இருந்து காவிரிக்குத் தாராளமாகத் தண்ணீர் விடப்படும்.

இந்த முறை தூர் எடுக்கும் பணி சற்றுத் தாமதமாகத் துவங்கினாலும், வேகமாக நடைபெற்று வருகிறது. புதிதாகச் சாலைகள் போடப்படுகின்றன. தஞ்சை மாவட்ட ஆட்சியாளர் சண்முக ராஜேஸ்வரன் மிகவும் சிரத்தையாக, எல்லாப் பணிகளையும் முடுக்கி விட்டு வருகிறார்.

''இந்த மகாமகத்தை முன்னிட்டுக் கும்பகோணத்திலும் அதைச் சுற்றிலுமுள்ள 12 சைவ, மற்றும் 7 வைணவ கோயில்களில் திருப்பணிகள் நடைபெறுகின்றன. மகாமகத்தன்று மக்கள் பரவலாக உபயோகிக்கும் தெருக்கள் உட்பட, பஸ் போகும் சாலைகள் புதிதாய்ப் போடப்பட்டுள்ளன. இன்னமும் அறுவடை சீஸன் முடியாததால், தொழிலாளர்கள் பணிக்குக் கிடைப்பது சற்று சிரமமாக இருக்கிறது. இருந்தாலும் வேறு மாவட்டத்தில் இருந்து ஆட்களைத் திரட்டி வேலை செய்து வருகிறோம். தெருக்களில் ஆக்கிரமிப்புகள் அகற்றப்பட்டிருக்கின்றன. நகரைச் சுற்றி ஆறு பஸ் நிலையங்கள் அமைக்கப்படும்'' என்றார் மாவட்ட ஆட்சியாளர்.

கும்பகோணம் ஏற்கெனவே சுகாதார சீர்கேடுகள் நிறைந்த நகரம். தெருவெங்கும் ஓடும் சாக்கடைகள், அங்கே செழிப்பாக வளர்ந்து கொண்டிருக்கும் கொசுப் பண்ணை. 'கும்பகோணம் கொசு' உலகப் புகழ்பெற்றதாயிற்றே! அப்படிப்பட்ட நகரில் லட்சக்கணக்கான மக்கள் கூடும் போது, எந்தவித நோய்களும் பரவி விடாமல் இருக்க இப்போதே தடுப்பூசிகள் போடப்பட்டு வருகின்றன. தெரு நாய்களும் பன்றிகளும் பிடிக்கப்படுகின்றன. நகருக்குள் நுழைபவர்களுக்கும் தடுப்பூசிகள் போடப்படும்.

''மகத்தின் போது 20 மருத்துவ முகாம்கள் அமைக்கப்படும். ஒவ்வொன்றிலும் ஐந்து டாக்டர்கள் பணியில் இருப்பார்கள். இது தவிர நடமாடும் எமர்ஜென்ஸி வண்டிகள் சுற்றிக் கொண்டே இருக்கும். தஞ்சை மருத்துவமனை டாக்டர்கள் தங்கள் உழைப்பைத் தருகிறார்கள்'' என்ற சண்முக ராஜேஸ்வரன் மேலும் சில தகவல்கள் தந்தார் :

''ஏகப்பட்ட புதிய கழிப்பறைகள் கட்டப்பட்டுள்ளன. அங்கே தாராளத் தண்ணீர் வசதி ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. கொசு, ஈ ஒழிப்புப் பணிகள் தீவிரமாகி வருகின்றன. கிட்டத்தட்ட 40 லட்சம் மக்கள் வருவார்கள் என்று எதிர்பார்க்கிறோம். ஒருவருக்கு ஐந்து லிட்டர் குடிதண்ணீர் கிடைக்குமளவுக்கு, வசதி செய்து தருவோம். மகாமகப் பணிகளில் எங்களோடு சில சேவை நிறுவனங்களும் தோள் கொடுக்க இருக்கிறார்கள். மக்களின் வசதிக்காக 400க்கும் மேற்பட்ட பஸ்களும், 22 ஸ்பெஷல் ரயில்களும் தஞ்சை - கும்பகோணம் - மயிலாடுதுறை மார்க்கங்களில்

விடப்படும்.''

அவசர அவசரமாகப் போடப்படும் சாலைகளின் தரத்தைப் பற்றிச் சந்தேகப்படுகிறார் தொகுதி எம். எல். ஏ. ராமநாதன். ''முதல்வர் மகாமகப் பணிகளுக்கு முன்னுரிமை கொடுத்து, ஒரு கோடிக்கும் மேல் நிதி அனுமதித்திருக்கிறார். எங்கள் அரசு ஒரு வருடத்துக்கு முன்னரே பதவிக்கு வந்திருக்குமானால், மகாமகத்தை ஒரு காரணமாக வைத்துக் கும்பகோணத்தை மாதிரி நகரமாக ஆக்கி இருப்பேன்'' என்கிறார் எம். எல். ஏ.

மகாமகப் பணிகள் முழுக்க முழுக்க அதிகாரிகளின் பிடியில் இருப்பதைக் கண்டித்தார் காங்கிரஸ் பிரமுகர் ஒருவர். ''லோக்கல் அ. தி. மு. க. எம். எல். ஏ.வை மட்டுமல்ல; எங்கள் எம். பி. மணிசங்கர அய்யரையும், இந்த அதிகாரிகள் தங்கள் பணிகளில் ஒருங்கிணைத்துக் கொள்ளவில்லை. இவ்வளவு பெரிய விழா ஏற்பாடுகளில் மக்கள் பிரதிநிதிகளுக்கு இடமில்லையா?'' என்று கோபத்துடன் கேட்டார் அவர்.

குடந்தைவாசிகளுக்கு ஒரு விஷயம் குறித்துச் சந்தோஷமே : மகாமகத்தை முன்னிட்டு சுமார் ஐந்து கோடி செலவில், நகரில் உள்ள பழைய மின் கம்பிகளை மாற்றியதைப் பெரிய விஷயமாக அவர்கள் சொல்கிறார்கள். புதிய மின் மாற்றிகள் (Transformers) மற்றும் துணை மின்நிலையங்கள் அமைக்கப்பட்டுள்ளன. அடுத்த பத்து வருடத்துக்கு, எந்தவிதப் பிரச்னையுமின்றி மிகச் சீரான மின் விநியோகம் இருக்குமாம்.

கும்பகோணத்திலும், சுற்று வட்டாரத்திலும் உள்ள கேடிகள், பிக்பாக்கெட்டுகள், ஆகியோர் மகாமகத்துக்கு ஒரு மாதத்துக்கு முன்னரே ''கை அரிக்குதும்மா'' என்று தமாஷ் பண்ணிக் கொள்வார்களாம். லட்சக்கணக்கான மக்கள் கூடும் இடங்களில் இவர்கள் கைவரிசையைக் காட்டுவது சகஜமாயிற்றே. கிரிமினல்களை மட்டும் அல்ல, கூட்டத்தைச் சாக்காக வைத்துப் பெண்களிடம் சில்மிஷம் செய்யும் இடி ராஜாக்களையும் பிடிக்க, பெரிய போலீஸ் படை தயாராகி வருகிறது. ஒரு துணை இன்ஸ்பெக்டர் ஜெனரலின் கீழ் 12000 போலீஸ்காரர்கள் பணியில் அமர்த்தப்படுவார்கள். மகாமகக் குளத்தைச் சுற்றி நான்கு கண்காணிப்புக் கோபுரங்கள் நிறுவப்படும். அதில் பொருத்தப்பட்ட டெலஸ்கோப்பிலிருந்து குளத்தைப் போலீஸார் கண்காணிப்பார்கள். இது தவிர 'மே ஐ ஹெல்ப் யூ' கவுண்டர்கள் நூற்றுக்கணக்கில் அமைக்கப்படும்.

அரசு தரப்பில் ஏற்பாடுகள் இப்படி இருக்க நகர மக்களும் தங்களைத் தயார்ப்படுத்திக் கொண்டு வருகிறார்கள். வீடுகள் வெள்ளை அடிக்கப்படுகின்றன.

''போன மாமாங்கத்தின் போது நாற்பது பேர் எங்கள் வீட்டில் தங்கியிருந்தார்கள். இந்த முறை நூறு பேர்கள் வருவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்'' என்கிறார்கள் ரவிச்சந்திரன் குடும்பத்தினர். ''எங்களுக்குத் தெரிந்தவர்கள், உறவினர்கள், எந்த வித முன்னறிவிப்பும் இன்றி வந்தாலும் - அவர்களை இன்முகத்துடன் வரவேற்று உபசரிப்பது எங்கள் கடமை'' என்கிறார்கள் இவர்கள்.

வரும் விருந்தாளிகளின் சாப்பாட்டுப் பிரச்னையைச் சமாளிக்க சமையற்காரரை ஏற்பாடு செய்து விட்டு, 2000 ரூபாய்க்கு மளிகைச் சாமான்களையும் வாங்கிப் போட்டு விட்டார்கள் சங்கரன் - விசாலாட்சி தம்பதியினர்.

''விலைவாசியை நினைச்சா பயமாத்



**குவிஸ்டைம் விடைகள் :**

1. இங்கிலாந்து
2. வெள்ளை (அ) மஞ்சள்
3. 1877
4. ராமநாதன் கிருஷ்ணன், ரமேஷ் கிருஷ்ணன்
5. ஃப்ளெஷிங்மெடோ ரோலண்டு கரோஸ்
6. 1971
7. ட்வைட் ஃபிலிப்ஸ்
8. விஜய் அமிர்தராஜ், ஆனந்த் அமிர்தராஜ் (1976)

தொகுப்பு : ஜூலி

தான் இருக்கு. ஆனா அவசியச் செலவு களைத் தவிர்க்க முடியாதே. பால் விலை யைத் திடீரென்று லிட்டருக்கு ஒரு ரூபாய் ஏற்றி விட்டார்கள்.... மகாமகத்தின் போது, ரேஷனில் தாராளமாக மண்ணெண்ணெய் விநியோகம் செய்ய வேண்டும்'' என்கி றார்கள் அவர்கள்.

''அத்தியாவசியப் பொருட்கள், பால் மற்றும் குடிதண்ணீருக்கு எந்தப் பிரச்னை யும் வராது'' என்கிறார்கள் மாவட்ட அதி காரிகள். ''போன மாமாங்கத்தில், சில விநி யோகக் கோளாறுகள் காரணமாகப் பிரச் னைகள் ஏற்பட்டன. இந்த முறை அப்படி எதுவும் ஏற்படாது.''

''ஏழை, பணக்காரன் வேறுபாடு இல் லாமல், ஜாதிப் பிரிவினை இல்லாமல் அனைவரும் ஓரிடத்தில் ஐக்கியமாகும் சோஷலிஸத் திருவிழா இது'' என்றார் ராதா. ''இந்த மகாமகத்தை முன்னிட்டா வது காவிரிக் கரைப் பகுதிகளைச் சுத்தம் செய்ய வேண்டும். அதில் வந்து கலக்கும் சாக்கடைக் கால்வாய்களை அடைக்க வேண்டும். தெருக்களை அசிங்கப்படுத்து பவர்களைப் பிடித்துக் கடுமையாகத் தண் டிக்க வேண்டும்'' என்றும் கூறினார்.

**மா**மாங்கக் குளத்தில் குளித்துப் புண்ணியம் தேடிக் கொள்வது ஒரு பேறு என்றால், வரும் பக்த கோடிகளுக்கு அன்ன தானம் செய்வது அதைவிடப் பெரிய புண்ணியம். அன்னதானம் என்றவுடன் குடந்தைவாசிகளுக்கு 'அன்னதான சிவன்' ஞாபகம் வரும்.

''மகாமகத்துக்குப் பல மாதங்கள் முன்னரே பொருட்கள் சேகரிக்க ஆரம்பித்து விடுவார் சிவன். சங்கர மடத்திலும், தெரிந் தவர்கள் வீட்டிலும் சேமித்து வைப்பார். ஒரே நாளில் ஆயிரக்கணக்கான பேருக்கு மோர் பரிமாற வேண்டி இருக்கும் என்ப தால் ஒரு மாதத்துக்கு முன்னரே தயிர் சேக ரித்து, பெரிய மரப் பீப்பாய்களில் அடைத்துக் குளங்களில் போட்டு விடுவார். ரெப்ரிஜிரேட்டர் அந்தக் காலத்தில் கிடை யாதே! சிவன் எந்தவித பலனையும் எதிர் பாராமல், ஆத்மார்த்தமாக அன்னதானப் பணியில் ஈடுபட்டதால் அவருக்கு இலவச மாகவே உதவி செய்ய நூற்றுக்கணக்கான வர்கள், வலிய வந்தார்கள்'' என்று நினைவு கூர்கிறார், சிறு வயதில் சிவனின் பிரமிக்கத் தக்க செயல்பாடுகளைப் பார்த்த சேஷாத்திரி சாஸ்த்திரிகள்.

அன்னதான சிவன் மறைவுக்குப் பிறகு அவர் பெயரில் இருந்த டிரஸ்ட் இரண்டு மாமாங்கங்களில் பெரிய அளவுக்குச் செய்யாவிட்டாலும், ஓரளவுக்கு அன்ன தான கைங்கர்யம் செய்தது. ''ஆனால் கடந்த மாமாங்கத்தில், அவர்கள் ஒன்றும் செய்ததாகத் தெரியவில்லை. டிரஸ்ட் இருக் கிறதோ என்ற ஐயம் எனக்குண்டு'' என்கி றார் சேஷாத்திரி.

குடந்தையில் இருக்கும் சங்கர மடம், அஹோபில மடம், விஜேந்திர ஸ்வாமி மடம் போன்ற பல, பக்தர்களுக்குத் தங்க இடமும் உணவும் கொடுக்கின்றன. மகா மகத்தின் போது பெரியவாள் (ஜெயேந் திரர்) அவர்கள் குடந்தைக்கருகில் உள்ள திருவிடைமருதூரில் முகாம் போடுவதாக இருக்கிறார்கள். ''அச் சமயம் மடத்தில் அதிருத்ர ஹோமம் நடத்த இருக்கிறோம்; அன்னதான கைங்கர்யமும் உண்டு'' என்கி றார் சங்கர மடத்து மானேஜர் பிச்சுமணி.

''மகாமகப் பெரு விழாவை டெலி விஷனில் நேரடியாக ஒளிபரப்ப ஏற்பாடு களைச் செய்து வருகிறோம்'' என்றார் மாவட்ட ஆட்சியாளர். பிறகென்ன, கும்ப கோணம் போகாதவர்களுக்குக் கூட மகா மகப் புண்ணியம் தூர்தர்ஷன் உபயத்தில் வீடு தேடி வந்து விடுகிறது!

– ப்ரியன்

படங்கள் : ராஜன்

வண்ணப்படங்கள் : தம்பையா



❒ இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பே சட்டசபையில் அங்கத்தினர்கள் செருப்புகளை வீசிய பெருமை மத்திய பிர தேசத்துக்கே உரியது. முதன் முதலில் சபா நாயகர் அறைக்குள் புகுந்து பொருள் களைத் துவம்சம் செய்ததும் அங்குதான். சென்ற மாதம் காங்கிரஸ் பெண் உறுப்பி னர்கள் முதலமைச்சருக்கு வளையல் களைப் பரிசளித்ததைத் தொடர்ந்து எழுந்த கலவரத்தில் செருப்புகள் பறந்தன. பெடஸ்டல் மின்விசிறிகள் கதைகளாகப் பயன்படுத்தப்பட்டன. சட்டமன்றக் கல வரங்களில் மத்தியப் பிரதேச சட்டசபை தனிப் பெருமையுடன் திகழ்கிறது.

ஆதாரம் : ''ஹிந்து''

தகவல் : அ. ஷண்முகசுந்தரம்

# தின  மலர்

தரும்

# 3வது இணைப்பு

தினமலர்

# கதைமலர்

வாரந்தோறும் இரண்டு புத்தக இணைப்புகள்
(வாரமலர், சிறுவர்மலர்) தந்து வந்த
தினமலர் நாளிதழ், இனி மூன்றாவது புத்தகமாக
தரப்போகிறது தினமலர்-கதைமலர்.

---

பிப். '92 முதல் ஒவ்வொரு செவ்வாயும்
தினமலர் இதழுடன் இணைந்திருக்கும்
32 பக்கப் புத்தகம் தினமலர் - கதைமலர்.

# டாக்டர் பட்டத்தின்மேல் அரசியல்வாதிகளுக்கு மோகம் ஏன்?



● சிவ. சண்முகம், சீர்காழி.

**? ரேஷன் சீனி விலையை மீண்டும் அரசு உயர்த்தி விட்டதே?**

! அது மட்டுமா? அரிசி, மின் கட்டணம், பால், பஸ் கட்டணம் முதலிய எல்லாவற்றையும்தான் உயர்த்தியுள்ளது. வாழப்பாடியார் தட்டிக் கேட்கப் போக, டில்லியில் என்ன விலை, கர்நாடகாவில் என்ன விலை, என்று மாநில வாரியாகப் பட்டியல் தந்து ஏழை பங்காளன் தமிழக அரசுதான் என்று விளம்பர நிருபணம் செய்கிறது ஜெ. ஆட்சி. நல்லவேளை, டோக்கியோவில் என்ன விலை, லண்டனில் என்ன விலை, பாரீஸில் என்ன விலை என்று கூறாமல் விட்டார்களே. அதற்காகவே நன்றி செலுத்த வேண்டியதுதான்.

● எஸ். ரவி கிருஷ்ணன், பம்பாய்.

**? தியாகராஜர் ஆராதனை விழாவில், வேங்கடாசலபதி பெருமானுடன் ஜனாதிபதி வேங்கடராமனை இணைத்து, குன்னக்குடி பேசியது சரியா? இத்தகைய முகஸ்துதி தேவையா?**

! பேசியிருந்தால் அதனால், வேங்கடமுடையானுக்கோ வேங்கடராமனுக்கோ பாதிப்பு ஏதும் ஏற்பட்டு விடாது; குன்னக்குடிக்கு மட்டுமே.

● அ. சீனிவாசன், கும்மிடிபூண்டி.

**? 'தேசிய மொழியாக இந்தி இருந்து விட்டுப் போகட்டும்; ஆனால் மத்திய அரசின் ஆட்சிமொழியாக ஆங்கிலம் இருக்க வேண்டும்' என்பதன் அர்த்தம் என்னவோ?**

! ஆட்சி மொழி என்பது வேறு; தேசிய மொழி என்பது வேறு என்பது அர்த்தம். மிக அதிகமான மக்கள் ஹிந்தி பேசுவதால் அது தேசிய மொழி என்கிறார்கள். போனால் போகட்டும் என்று ஏற்கலாம். ஆனால் மத்திய ஆட்சி மொழியாக ஹிந்திக்கு மட்டும் சிறப்பிடம் தரப்படும் போது மற்ற மொழி பேசுவோருக்கு பாதிப்பு ஏற்படுகிறது. அவர்கள் இரண்டாந்தரப் பிரஜைகளாகிறார்கள். ஆங்கிலம் எல்லோருக்கும் பொதுவாக விளங்குவதால் ஏற்றத் தாழ்வுக்கு இடமில்லை.

● எம். அசோக் ராஜா, அரவக்குறிச்சிப் பட்டி.

**? பிரதமரின் தேர்தல் வெற்றி கின்னஸ் சாதனை அல்லவே; அவரை விட அதிக வாக்குகள் பெற்ற ரஷ்ய அதிபர் போரிஸ் யெல்ஸ்டின் இருக்கிறாரே?**

! கம்யூனிஸ நாட்டில் நடந்த தேர்தலுக்கும் ஜனநாயக நாட்டில் நடந்த தேர்தலுக்கும் வித்தியாசம் உண்டு என்பதை கின்னஸ் ஒப்புக் கொள்ளாவிட்டாலும் நாம் மறக்கக் கூடாது.

● தி. சு. ராமகிருஷ்ணன், திருவண்ணாதபுரம்.

**? முன்னாள் அமைச்சர் சுப்புலட்சுமியையும் அவர் கணவரையும் கைது செய்தது குறித்த கேள்விக்கு உங்கள் பதில், நீங்கள் பசுத்தோல் போர்த்திய புலியாகத்தான் இருப்பீரோ என்ற ஐயத்தை ஏற்படுத்துகிறதே?**

! நான்தான் அப்படி என்றால் தேசிய நாளிதழான ஹிந்துஸ்தான் டைம்ஸ் ஆசிரியர் கூடவா? சிறந்த பத்திரிகை ஆசிரியர் என்று அண்மையில் கௌரவிக்கப்பட்ட அவர், தலையங்கத்தில், இந்த நடவடிக்கையை ''வடிக்கட்டின அரசியல் பழிவாங்கல் நடவடிக்கை'' என்று வர்ணிக்கிறாரே!



● முகஸ்துதி தேவையா?



● கின்னஸ் சா...

நீங்கள் கேட்டவை - தராசு

● ஆர். விஜயலக்ஷ்மி, துறையூர்.

? காவேரி நீர்ப் பிரச்னை பற்றி, கர்நாடக முதல்வர் இவ்வளவு அக்கிர மத்துக்குப் பிறகும் அலட்சியமாக இருப்பது பற்றி?

! கர்நாடக ஆட்சியாளர்கள் அப்படி யொன்றும் அலட்சியமாக இருந்து விட வில்லை. சமீபத்தில் கர்நாடகாவில் காவிரிக் கரையையொட்டி மோட்டார் சைக் கிள் பயணம் செய்த இளைஞர்கள் சொன் னார்கள் : எளிய விவசாயிகளைக் கர்நாடக அரசியல்வாதிகள் வளமான வயல்காட் டுக்கு அழைத்துப் போய், 'நல்லா பார்த் துக்குங்க ; தமிழ்நாட்டுக்குத் தண்ணீர் கொடுத்தால் அடுத்த வருஷம் இந்த மாதிரி பசுமையான பயிர்களைக் காண முடியாது' என்று வெறுப்பேற்றியிருக்கிறார்கள். ஆட்சியாளரின் ஆதரவின்றியா இப்படி நடந்து கொள்ள முடியும்?

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? சுபாஷ் சந்திர போஸ், அபுல் கலாம் ஆஜாத் ஆகியோருக்கு பாரத ரத்னா விருது வழங்கப்பட்டிருப்பது குறித்து...?

! அடுத்த வருஷம் அசோக சக்கரவர்த் திக்கும் ராஜ ராஜ சோழனுக்கும் சான்ஸ் இருக்கும்!

● கே. பி. சாரதி, வேலூர்.

? இந்த வருஷம் தியாகராஜ ஆராதனையில் தங்களைக் கவர்ந்த விஷயம்?

! டீ. வி. ஒளிபரப்புக்கு சாட்டிலைட் கிடைக்கக் காத்திருந்து ராகு காலத்தில் பஞ்ச ரத்ன கிருதிகள் பாடியதுதான். மூட நம்பிக்கையை விஞ்ஞானம் வென்றது.

● எஸ். ஃபைசுதீன், காஞ்சிபுரம்.

? டாக்டர் பட்டத்தின் மேல் அரசியல் வாதிகளுக்கு ஏன் இத்தனை மோகம்?

! அரசியல் மோகம், அதிகார மோகம், பதவி மோகம், இவற்றின் தொடர்ச்சியாகப் பட்டத்தின் மேல் மோகம்.

● மு. அய்யூப்கான், சத்திரம் கருப்பூர்.

? முன்பு ஆயிரம் பேர் அணிவகுப்பு இப்போது விமானத்தில் மலர் தூவி வரவேற்பு அடுத்த கட்டமாக...?

! வெண் கொற்றக் குடையும், வெண் சாமரமும்தான்.

● மேஜர்தாசன், ஈரோடு.

? "ஜெயலலிதா திருவாகப் பிறந்து திருமகளாக விளங்குகிறார்" என்று ஆர். எம். வீ. கூறியிருக்கிறாரே, சரியான விளக்கம் என்ன?

! புரியாமல் திரு திருவென்று நாம் விழிப் பதுதான் விளக்கம்.

● எஸ். நாரம்புநாதன், கரண்டை.

? கவுண்டமணி முதல்வராகவும், செந்தில் நிதி அமைச்சராகவும் இருந் தால் தமிழ்நாடு எப்படி இருக்கும்?

! இப்போதே விதிக்கப்படும் வரிகளும், உயர்த்தப்படும் விலைவாசிகளும் நம் சிரிப் புக்கு வரி போட்டது போலத்தான் உள்ளன.

● என். ஆர். சுப்பிரமணியன், பூனாம் பாளையம்.

? கமல்ஹாசன் தனது ரசிகர்களுக்கு விடுத்த அறிவுரை பற்றி...?

! அரசியல் வேண்டாம் ; சமூகப்பணி ஆற்றுங்கள் என்றதுதானே? புத்திசாலி என்று மறுபடி காட்டிக் கொண்டு விட்டார்.

● எம். ஜாபர்ஸலாம், திட்டச்சேரி ☐

? தங்களுக்கு மிகவும் பிடித்த சுய சரிதம் யாருடையது?

! இரண்டே வரிகளில் அடங்கி விட்ட ஜே. ஆர். டி. டாடாவின் சுயசரிதம். "இனிய ஆச்சர்யமான" பாரத ரத்னாவை "அடக்கத்துடன் ஏற்று" அவர் சொன்னார். "இத்தகைய பட்டம் வழங்கப்படுவதற்கு உரிய சாதனைகள் என்று வழக்கமாகக் கருதப்படுகிற எதையும் நான் செய்து விட வில்லை."



☛ ரசிகர்களுக்கு அறிவுரை



☛ சுருக்க சுயசரிதம்



அலட்சியம் இல்லை



☛ வெண்கொற்றக் குடையும்...

☐ ரூ 25 பரிசு பெறுபவர் : எம். ஜாபர் ஸலாம், 29, மேலத் தெரு, திட்டச்சேரி - 609 703.

# ஐம்பது ஆண்டுகளுக்கு முன்...




## கல்கி, பிப்ரவரி 16, 1942

### புது இடம்

நல்ல முகூர்த்தத்தில் ''கல்கி'' காரியாலயம் புது இடத்துக்கு மாற்றப்பட்டது. எதிரி விமானங்கள் சென்னை நகரின் பக்கம் தலைகாட்டப் போவதேயில்லை - அப்படித் தலைகாட்டினாலும் சென்னையைப் பிரதட்சணம் செய்து நமஸ்கரித்து விட்டுத் திரும்பி விடும் என்பது நமது நம்பிக்கை. என்றாலும், ஒருவேளை எதிரி விமானங்கள் வந்து தாக்குவது என்று ஏற்பட்டால் அவற்றின் பிரதான இலக்குகள் ரயில்வே ஸ்டேஷன்களாயிருக்கும் என்பது யாவரும் அறிந்ததே. அப்படிப்பட்ட நிலைமை ஏற்படும் போது, 'கல்கி' காரியாலயத்தின் அடையாளத்தைக் கொண்டு எழும்பூர் ரயில்வே ஸ்டேஷனைக் கண்டு பிடிக்கும்படியான சௌகரியத்தைப் பகை விமானங்களுக்குக் கொடுக்க நாம் சிறிதும் விரும்பவில்லை. எனவே, எழும்பூர் ஸ்டேஷனைக் கண்டுபிடிக்க முடியாமல் பகை விமானங்கள் திண்டாடட்டும் என்பதாக நமது காரியாலயத்தை வேறிடத்துக்கு மாற்றியிருக்கிறோம். நமது புது விலாசம் :- ஸ்லேடன் கார்டன்ஸ் சாலை, பூந்தமல்லி ஹைரோட், கீழ்ப்பாக்கம், சென்னை.

- என்ன சேதி

### சீனாவின் மாபெரும் தலைவர்

சுதந்திர சீன தேசத்தின் மாபெருந் தலைவரான சேநாதிபதி சியாங் காய் ஷேக் தமது மனைவியுடன் சென்ற வாரத்தில் பாரத நாட்டுக்கு விஜயம் செய்தார். இந்த மகா வீரரிடமும், இவருடைய மனைவியும் டாக்டர் ஸன்யாட் ஸன்னின் புதல்வியுமான மாடம் சியாங் காய் ஷேக்கினிடமும் இந்திய மக்களுக்கு வெகு காலமாக மதிப்பும் மரியாதையும் உண்டு. சீன மக்களுக்குள் ஒற்றுமையை ஏற்படுத்தவும், ஜப்பானுடைய ஆக்கிரமிப்பை எதிர்த்து நிற்கவும் இந்த வீர தம்பதிகள் செய்து வரும் மகத்தான முயற்சிகளைக் கண்டு நாம் அதிசயித்திருக்கிறோம். சமீப காலத்தில், முக்கியமாக ஜப்பான் யுத்தம் ஆரம்பமான பிறகு, பிரிட்டிஷ் ராஜதந்திரிகளுக்கும் ராணுவ தந்திரிகளுக்கும் கூட இவர்களிடம் மரியாதை ஏற்பட்டிருக்கிறது! தளபதி வேவல் சுங்கிங்குக்கு ஓடிச் சென்று சியாங் காய் ஷேக்குடன் கலந்தாலோசித்தார். பர்மாவின் பாதுகாப்புக்குச் சைனிய உதவி கேட்டார். சீன அரங்கத்தில் பிரிட்டிஷ்

---



### இரு விளம்பரங்கள்

●● சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்பாக அன்றைக்கே விளங்கியிருக்கிறது லக்ஸ். இந்த இதழில் சருமத்தை எளிதில் பாதுகாக்க வழி சொல்பவர் சோபனா ஸமரத்.

●● ''பேஷ் பேஷ் ரொம்ப நன்னாயிருக்கே'' புகழ் நரஸூஸ் நிறுவனம் காப்பி மட்டும் அல்ல, டீ தூளும் தயாரித்து இரண்டையும் சேர்த்தே விளம்பரம் செய்திருக்கிறது. அறுபது ஆண்டுகளாகவே காப்பி தயாரித்து வரும் நிறுவனம் ஏனோ இடையில் டீயைக் கைவிட்டு விட்டது!

அமெரிக்கத் துருப்புகள் உள்பட எல்லாத் துருப்புகளுக்கும் சியாங் காய் ஷேக் சேநாதிபதியானார். இத்தகைய புகழ்பெற்ற வீரரின் இந்திய விஜயம் ஸபலமாக வேண்டுமென்று இறைவனைப் பிரார்த்திக் கிறோம்.

**- அட்டைப்பட விளக்கம்**



## ஏண்டா அழுகிறாய்?

தகப்பனார் : கிட்டு, ஏண்டா அழுகிறாய்?

கிட்டு : அம்மா அடித்தாள், அப்பா!

தகப்பனார் : அம்மா என்னத்துக்காக உன்னை அடித்தாள்?

கிட்டு : நான் அழுதேன், அடித்தாள்.

**- காலக்ஷேபம்**

## சகுந்தலாவின் பொன் விழா

சென்னை நகரில் ஐம்பது வாரம் மேற்படி படம் ஓடியதை முன்னிட்டு, சென்ற வாரத்தில் சினிமா சென்ட்ரலில் பொன் விழாக் கொண்டாட்டம் நடைபெற்றது.

இந்த வைபவத்துக்கு நான் போயிருந்த சமயத்தில், ''சகுந்தலா'' படத்தை முதன் முதலில் நான் பார்த்து விமரிசனம் எழுதியது சம்பந்தமான பழைய ஞாபகங்கள் ஏற்பட்டன.

படம் பார்ப்பதற்கு உட்கார்ந்த போது நான் அதிகமாய் ஒன்றும் எதிர்பார்க்கவில்லை. இந்தப் படப்பிடிப்பின் போது ஏற்பட்ட இடையூறுகளைப் பற்றி அறிந்திருந்தபடியால், படம் சாதாரணமாயிருக்குமென்றுதான் எண்ணினேன். ஆனால், கண்வருடைய ஆசிரமத்தில் ''எங்கும் நிறைநாதப் பிரம்மம்'' என்ற பாட்டைச் சகுந்தலை பாட ஆரம்பித்ததும், என்



எண்ணம் மாறிவிட்டது. போகப் போக வியப்பும் பிரமிப்புமாயிருந்தது. படம் முழுவதிலும் கானாமுத வெள்ளம் பொங்கிப் பெருகி ஓடியது மட்டுமல்ல; ''சகுந்தலை''யின் நடிப்புத் திறமைதான் அதிகமான பிரமிப்பையளித்தது. உயர்ந்த ஹிந்தி படங்களிலும் இங்கிலீஷ் டாக்கிகளிலும் தோன்றும் நட்சத்திரங்களின் நடிப்புக்குக் குறைவாயிருந்ததாக நான் நினைக்கவில்லை. இன்னும் இந்தப் படத்தில் நடித்திருக்கும் எல்லாரும், குழந்தை ராதா வரையில், பெரும்பாலும் நன்றாக நடித்திருப்பதாகவே தோன்றியது.

சிறையிலிருந்து வெளிவந்ததும், நான் தெரிந்து கொள்ள விரும்பிய அநேக விஷயங்களில் ''சகுந்தலா'' படம் எப்படி ஓடிற்று என்பதும் ஒன்று. மாயவரத்தில் என் நண்பர் ஒருவர், ''இங்கே சகுந்தலா ஓடுகிறது; படம் அபாரம்'' என்றார். அவர் படித்த மனுஷர்; பொறுப்புள்ள உத்தியோகத்திலுள்ளவர். ''அப்படியா? நீங்கள் பார்த்தீர்களா?'' என்றேன். ''பார்த்தீர்களா என்று கேட்கிறீர்களே! இந்த ஊரில் 45 தடவை பார்த்தேன். அப்புறம் சென்னைக்குப் போன போது பிரபாத்தில் எப்படியிருக்கிறது என்று தெரிந்து கொள்வதற்காக அங்கே ஒரு தடவை பார்த்தேன்!'' என்றார். நான் இதை நம்பாததைக் கண்டு அவர் சத்தியம் செய்தார்! பொதுவாகத் தமிழ் நாடெங்கும் ''சகுந்தலா'' விஷயத்தில் பொது மக்களின் அபிப்பிராயம் என்னுடைய அபிப்பிராயத்தையொட்டியே இருந்தது என்று அறிய மிகவும் திருப்தி ஏற்பட்டது.

**- ஆடல் பாடல் - ''கர்நாடகம்''**

## ரொம்ப 'தாங்ஸ்'!




அரசியல்.....


பாரபட்சத்துக்குப் பலி!


ஏறத்தாழச் சிறைவாசம்

## கவிழ்க்கப் பார்க்கிறவரைக் கவர்னராகப் போடு

## சார்மினார் சானல் :

★ காங்கிரஸ் குழுச் சண்டைகளுக்கு ஒருவழியாகத் தற்காலிகத் தீர்வு-சென்னா ரெட்டிக்கு ராஜஸ்தான் கவர்னர் பதவி! அவர் முதலமைச்சர் பதவியிலிருந்து இறக்கப்பட்டபின் பலவிதங்களில் தொடர்ந்து ஜனார்த்தனன் ரெட்டியைக் கவிழ்க்க முயன்று கொண்டிருந்தார். கவர்னர் பதவி தந்து சென்னாரெட்டியை மாநில அரசியலிலிருந்து நீக்கச் சுலபமான வழி கண்டு விட்டார் பிரதமர். ''உன் கட்சிப் போராட்டமா, ஆட்சிக்குச் சிரமமா - இந்தா கவர்னர் பதவி!'' என்றாகிவிட்டது. ஆனால் ''தொடர்ந்து அரசியலில் தீவிரமாக ஈடுபடுவேன்'' என்ற குண்டைப் போட்டிருக்கிறார் சென்னா! கவர்னர் பதவி அரசியலுக்கு அப்பாற்பட்டது என்று யார் சொன்னது!

★ 73 வயது அரேபியக் கிழவனை மணந்து கொண்ட அமினா,டெல்லி ஹோம் ஒன்றில் ஏறத்தாழ சிறைவாசத்தில்! கைவிடப்பட்ட இது போன்ற 200 பெண்களுடன் அமினா, குரூரமான திகார் ஜெயிலின் ஒரு பகுதியான ஹோமில். ஜெயில் உடை, கம்பிகள், குற்றவாளிப் பெண்களுக்கு மத்தியில் ஒரு பலியாடு. அமினாவை மீட்டுக் கொடுத்த ஏர் ஹோஸ்டஸ் அமிர்தா அலுவாலியா தொடர்ந்து அமினாவைக் கவனித்து வருகிறார். அரசியல்வாதிகள் பலரை அமிர்தா அணுகி உதவி கோரியிருக்கிறார். ஆனால் இதைப் பெரிய விஷயமாக யாரும் எடுத்துக் கொள்ளவில்லை என்று வருந்துகிறார் அமிர்தா.

★ பெங்களூர் திரைப்படவிழாவில் கலந்து கொள்ளாமல் சர்ச்சைக்குள்ளாயின இரு படங்கள். தேர்வுக் குழுவினரின் (அரசியல்) பாரபட்சம் இதில் தெரிந்தது. ''ஆதித்யா 369'' என்ற படம் இதில் ஒன்று. என்.டி.ஆரின் மகன் பாலகிருஷ்ணன் நடித்தது. 'ஆதித்யா 369' என்பது ஒரு கால

---

கல்கத்தா விவேகானந்தா பூங்காவில் இன்று பாரதிக்கு ஒரு சிலை இருக்கிறது என்றால்,

கல்கத்தாவில் ஒரு முக்கியமான

# தங்கமான பாரதி பெயரில் பொன்விழா காணும் சங்கம்


டாக்டர். கே. எஸ். கிருஷ்ணன்





— ஆஞனர் பதவி

யந்திரம். உட்கார்ந்து ஸ்விட்சை அமுக்கு கிறார் பாலகிருஷ்ணன். கிருஷ்ணதேவ ராயர் காலத்துக்குப் போய்விடுகிறார். அந்த காலத்து வாழ்க்கையைப் பார்க்கிறார். இன்னொருதரம் ஸ்விட்சை அழுத்த, மூன் றாவது உலகப் போருக்குப் பின் உள்ள உலகிற்குக் கால இயந்திரம் கொண்டு செல் கிறது. போரால் பெரும் அழிவு, அணுக் கதிர்களால் பாதிக்கப்பட்டவர்களில் சிலர் தப்பி அண்டர்க்ரௌண்டில் வாழ்கிறார் கள். கால யந்திரத்தில் வருபவர்களை எச்ச ரித்துத் திருப்பி அனுப்பி விடுகிறார்கள்! பாடகர் எஸ்.பி. பாலசுப்ரமணியம் சுமார் 6 கோடி ரூபாய் செலவில் தயாரித்திருக் கிறார். சிங்கீதம் சீனிவாசராவ் டைரக்‌ஷன். Back to Future, The Day After ஆகிய ஆங்கிலப் படங்களின் பாதிப்பு இருந்தா லும் இந்தியப் படங்களில் இவ்வம்சம் முதன் முதலில் காட்டப்பட்டது இதில் தான். தொழில் நுட்ப வெற்றிக்காகவே இப் படம் திரைப்படவிழாவில் காட்டப்பட வேண்டும் என்ற கோரிக்கை எடுபட வில்லை.

''வோல்கா என்ற தெலுங்கு பெண் எழுத்தாளர் தம் கணவருடன் சேர்ந்து எடுத்த படம் ''பத்ரம் கொடுக்கோ''. நண்பர்களிடமிருந்து வசூலித்த பண உதவி. ஒருமாத காலம் சிறுவர்களுக்குப் பயிற்சி யளித்து, அவர்களைப் படத்தில் நடிக்க வைத்தது முக்கிய அம்சம். மூன்று தெருச் சிறுவர்களைப் பற்றின கதை. விபச்சாரி களும் இதர குற்றவாளிகளும் இவர்களை எப்படித் தவறாகப் பயன்படுத்துகிறார்கள் என்று சித்திரித்துள்ளார்கள். மீரா நாயரின் தெருவில் வாழும் சிறுவர்களைப் பற்றின ''சலாம் பாம்பே'' படத்தோடு இதையும் ஒப்பிடலாம் என்றாலும், தனித்தன்மை வாய்ந்த இப்படத்தையும் தேர்வுக் குழு நிராகரித்தது பலத்த சர்ச்சையைக் கிளப்பி உள்ளது.

— அப்பன்

---

சாலைக்கு இன்று ''பாரதி சரணி'' என்று பெயர் வழங்குகிறது என்றால்,

காரணம், கல்கத்தா, ''பாரதி தமிழ்ச் சங்கம்''. விஞ்ஞான மேதையும் இலக்கிய ரசிகருமான டாக்டர் கே. எஸ். கிருஷ்ணன் தொடங்கி வைத்த பாரதி தமிழ்ச் சங்கத்தின் சாதனைகள் மேலும் பல :

கல்கத்தா பல்கலைக் கழகத்தில் தமிழ்த் துறை அமைந்தது. அதற்கு ''பாரதி தமிழ் இருக்கை'' என்று பெயர்.

பாரதி படைப்புக்களைப் பிற மாநிலத் தவரும் ரசிக்க வசதியாக ஆங்கிலம், ஹிந்தி, வங்காளி, மராத்தி ஆகிய மொழிகளில் இருபது நூல்களை வெளியிட்டுள்ளது. இலவச வாசக சாலையும் நடத்துகிறது.

இன்று பொன் விழா காணும் பாரதி தமிழ்ச் சங்கம், ஏழை மாணவருக்கு உப காரச் சம்பளம், இலவச சீருடை என்பது போன்ற பல சமூகநல சேவைகளையும் வழக்கமான பாணியில் செய்து வருகிறது. தமிழருக்கு வங்கமொழி வகுப்புக்களும் தமிழரல்லாதாருக்குத் தமிழ் வகுப்புக்களும் நடத்துகிறது.

சென்ற ஜனவரி 4 முதல் ஒரு வார காலம் இயல் இசை நாடக விழா நடத்தியது - பொன் விழா கொண்டாட்டமாக.

பாரதி நூற்றாண்டு விழா கல்கத்தாவில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட காரண மாக இருந்த கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கம், வங்காளிகளுக்கும் தமிழருக்கும் இடையே ஒரு பாலமாகச் செயல்பட்டு வரு கிறது.

இதுவரை சங்கத்துக்கு என்று ஒரு தனி கட்டிடம் அமையாதது இவர்களுக்கு இருந்து வந்த குறை. தனி கட்டிடம் இல்லா விட்டாலும் தனி ''ஃபிளாட்''டாவது பெறு வோம் என்று பத்தாண்டு முயற்சி செய்து இன்று ''பாரதி நிலையம்'' தோன்றி யுள்ளது.

'சிறுகக் கட்டி பெருக வாழ்' என்று சொன்னது இதைத்தான் போலும்!

— எஸ். கே. எம்.

வடக்கு வாசல்

# தலைநகரைக் கலக்கிய தெருநாய்!

சாதனை நிச்சயம் கின்னஸில் இடம் பெறும். காலை எட்டு மணி முதல் இரவு எட்டு மணிக்குள் தில்லியில் சுமார் ஐந்து கிலோ மீட்டர் சுற்றளவுக்குள் சுற்றிச் சுற்றி வந்து அந்த நாய் 118 நபர்களைக் கடித்திருக்கிறது! ஒரே பகுதியில் அடுத்தடுத்து யாரையும் கடிக்கவில்லை, அந்த சாமர்த்திய வில்லன்! வெவ்வேறு இடங்களில் 'தொடர் கடி' நாடகம் நடத்தியுள்ளது.

கடிபட கடிபட ஒவ்வொருவராகச் சுமார் நூறு பேருக்கு மேல் ராம் மனோகர் லோஹியா ஆஸ்பத்திரிக்கு சிகிச்சைக்கு வர, டாக்டர்கள் அலமந்து போய் மாநகராட்சி அதிகாரிகளிடம் முறையிட்டனர். குழுவுக்கு நான்கு பேர் வீதம் மூன்று நாய்பிடிக் குழுக்கள் சல்லடை போட்டுச் சலித்தும் பிரயோசனமில்லை. வெறி நாய் எல்லோருக்கும் டிமிக்கி கொடுத்துவிட்டது!

## தகனத்துக்கு தக்ஷிணை மாருதி கார்!

காசி என்னும் வாரணாசி க்ஷேத்திரத்தில் உயிர்விட்டால் சுவர்க்கத்திற்குச் சுலபமான பாஸ்போர்ட் என்பது நம்பிக்கை. மணிகர்ணிகா கட்டத்தில் சவசம்ஸ்காரம் பெற்றாலே கோடி புண்ணியம் கிடைக்குமாம். ஆனால் இறந்தவர் உடலை அங்கே எடுத்துச் செல்லும் உற்றார் உறவினருக்கு மாத்திரம் நரகவேதனைதான். அங்கே ஆயிரம் வருட காலமாக அணையாமல் காக்கப்படும் அடுப்பிலிருந்து இடுகாடு காப்பாளர்கள்தான் நெருப்புக் கொடுக்க வேண்டும். பரம ஏழைகளிடம் கூட இவர்கள் குறைந்தது நூறுரூபாய் கறந்து விடுகிறார்கள். பசை உள்ளவர்களாக அடையாளம் காட்டிக் கொண்டு விட்டால் 'நெருப்புக் கொடுக்க தக்ஷிணை' ஐயாயிரம் முதல் பதினையாயிரம் ரூபாய் வரை. சிலசமயங்களில் பசுமாடு முதல் மோட்டார் கார் வரை பொருளாகவும் தக்ஷிணை கறந்து விடுகிறார்கள். இவர்களின் கொட்டத்தை அடக்க உத்தரப்பிரதேச அரசு, ஹரிச்சந்திரா கட்டத்தில் ஒரு மின்சார இடுகாடு கட்டியது. அங்கே கட்டணம் வெறும் அறுபத்தைந்து ரூபாய்தான். பழமைவாதிகளான நம் பொது மக்கள் அங்கே போக வேண்டுமே? தினம் பத்து கிராக்கிக்கு மேல் இல்லை! மணிகர்ணிகா கட்டத்திலோ தினம் சராசரி நூறு தகனங்கள்.

## மூடப்படும் மதுக்கடைகள்!

பஞ்சாப் மாநில பயங்கரவாதிகள் செய்யும் அட்டகாசங்கள் யாவரும் அறிந்ததே. ஆனால் அவர்களால் பஞ்சாப் அரசுக்கு ஏற்பட்டுள்ள ஒரு புதிய தலைவலி ஆச்சரியமானது. சாராய விற்பனைக்கு எதிராக இவர்கள் தொடுத்துள்ள போரினால் அரசுக்குக் கலால்வரி வசூலில் செமை அடி. கடந்த ஆண்டில் மாத்திரம் இவர்கள் பேச்சைக் கேட்காத நூற்றிநாற்பது சாராய விற்பனையாளர்களைக் கொன்று குவித்துச் சுமார் எழுபத்தைந்து மதுக்கடைகளை அடித்து நொறுக்கியுள்ளனர். இதனால் சாராய ஏலம் எடுக்கவே பலர் பயப்பட, சுமார் இருநூறு மதுக்கடைகள் மூடப்பட்டுள்ளன! இந்தக் கெடுபிடிகள் ஒரு சில மாவட்டங்களில்தான். இதுவே மாநிலம் தழுவிய இயக்கமாக மாறிவிட்டால் அரசின் நிதிநிலைமை என்னாகும் என்ற கவலை அதிகாரிகளைப் பிடித்துள்ளது.

- இருள்நீக்கி கணேசன்

அந்த பேஷன்டின் வயிறு 'ஸ்ட்ரைக்' செய்தது! அதன் உள்கவர் ஜவ்வுப் பகுதி ஒட்டிக் கொண்டு விட, அவசர அறுவைச் சிகிச்சை.

சில வாரங்கள் கழித்து, வயிற்றுப் பகுதியில் பெரிய ஆபரேஷன் தழும்புடன் வீடு திரும்பினாள். சில நாட்கள் சென்று மீண்டும் அதே பிரச்னை. மீண்டும் ஆஸ்பத்திரி, ஆபரேஷன், வேதனை, வயிற்றில் மேலும் தழும்புகள். போதாததற்கு, ஒரு முறைக்கு இருமுறையாக ஏராளச் செலவு... வாழ்க்கையே வெறுத்து விட்டது...!



டாக்டர் ராவ்

லாபரஸ்கோபிக் முறையில் அறுவைச் சிகிச்சை

# சின்னத் துளையிட்டுப் பெரிய ஆபரேஷன்!

''இனி யாருக்கும் இப்படிப்பட்ட அவஸ்தை இருக்கத் தேவையில்லை'' என்கிறார் டாக்டர் பி. கிருஷ்ணாராவ். இவர் சென்னை வில்லிங்டன் மருத்துவ மனையைச் சேர்ந்தவர்.

"Laparoscopic cholecystectomy என்கிற புதிய அறுவைச் சிகிச்சை முறை கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. 'கீ ஹோல் (சாவித் துவாரம்) ஆபரேஷன்' என்று அழைக்கப் படும் இம் முறையில் நோயாளியின் வயிற்றைக் கிழிக்காமலே சிறு துளையிட்டு ஆபரேஷன் செய்து விடுகிறோம். அபெண்டிஸைடிஸ், கல் நீக்குதல், கால் பிளாடர் நீக்குதல் போன்ற பெரிய ஆபரேஷன்களைச் செய்து கொண்ட நோயாளிகள் கூட ஓரிரு நாட்களில் வீட்டுக்குப் போய் சகஜ வாழ்க்கை மேற்கொள்ளலாம். திரும்பத் திரும்ப ஆபரேஷன் செய்ய வேண்டிய அரிய கேஸ்களில் கூட நோயாளிக்கு வலியும் வேதனையும் குறைவே...''

''வயிற்றைக் கிழிக்காமல் எப்படி பெரிய ஆபரேஷன்கள் செய்ய முடியும்...?'' குழம்பினோம்.

இம்முறையில் பயிற்சி பெற அமெரிக்கா போய் வந்த டாக்டர் ராவ் மேலும் விளக்கினார் :

''லாபரோஸ்கோப் என்ற கருவியைக் (கு. க. ஆபரேஷனுக்குப் பயன்படுத்துவது வேறு லாபரோஸ்கோப்) கொண்டு வயிற்றுப் பகுதியில் 21 முதல் 25 மில்லி மீட்டர் அளவுக்குச் சிறிய துளை போடு

வோம். அதன் வழியே நுழைக்கப்படும் குழாய் போன்ற அமைப்பின் முனையில் தெரியும் வயிற்றுப் பகுதியின் காட்சி, 'வீடியோஸ்கோப்' என்ற கருவியின் உதவியால் டீ.வி. திரை போன்ற அமைப்பில் பிரதிபலிக்கப்படுகிறது.

''திரையில் நோயாளியின் வயிற்றுப் பகுதியைப் பார்க்கும் டாக்டர் எந்தப் பகுதியில் கோளாறு உள்ளது என்பதைத் துல்லியமாகக் காண்கிறார். பிறகு ஒரு கார் டிரைவரின் திறமையுடன் சில பெடல்களை இயக்கி, கைகளையும் திறமையுடன் உபயோகித்து நோயாளியின் வயிற்றுக்குள் செலுத்தப்பட்டுள்ள லாபரஸ்கோப் கருவியைப் பிரச்னைப் பகுதிக்குத் திசை திருப்புகிறார். வயிற்றுக்குள் இருக்கும் கருவியின் முனையில் உள்ள லேசர் பீம்களை இயக்கி, கோளாறைச் சரிசெய்கிறார்; அல்லது வெட்டி நீக்குகிறார்.

''வயிற்றைக் கிழித்துச் செய்யும் ஆபரேஷனில் நேருக்கு நேராகப் பிரச்னையைப் பார்க்கிறோம். நேரடியாகக் கைகளை உபயோகிக்கிறோம். ஆனால், லாபரோஸ்கோப் முறையில் இருபரிமாண உருவத்தைத்தான் திரையில் பார்க்கிறோம். ரிமோட் கன்ட்ரோல் முறையில் இயந்திரத்தை இயக்கி, 'ஆபரேஷன்' செய்கிறோம். இதற்கான கவனத்தையும் திறமையையும் முனைந்து வளர்த்துக் கொள்வது அவசியம்.''

இந்த ஆபரேஷன் முறையில் டாக்டர்கள் பயிற்சி பெறுவதற்காக ஒரு 'டம்மி' கருவியை வில்லிங்டன் மருத்துவமனை விரைவில் தருவிக்கும். சமீபத்தில் இந்த அறுவைச் சிகிச்சை முறை பற்றி ஒரு கருத்தரங்கம் நடத்தியது இம் மருத்துவமனை. அப்போது செய்யப்பட்ட ஆபரேஷனைத் தென்னகமெங்குமிருந்து வந்திருந்த பல டாக்டர்கள் திரையில் பார்த்தபடி கேள்விகள் கேட்க, ஆபரேஷன் செய்த டாக்டர் பதில்கள் அளித்தார். எனவே மருத்துவ மாணவர்களுக்கும் இம் முறை உதவிகரமாக இருக்கும். ஆனால் கான்ஸர் ஆபரேஷன்களை இம்முறையில் செய்ய முடியாதாம்.

''இறக்குமதி செய்யப்படும் லாபரஸ்கோப் கருவியின் விலை 16 முதல் 17 லட்சம் ரூபாய். ஒரு லாபரோஸ்கோப் அறுவைச் சிகிச்சைக்கு 12,500 முதல் 17,000 ரூபாய் வரை செலவாகும். திறந்த ஆபரேஷன் எனில் 20,000 ரூபாய்!'' என்கிறார் வில்லிங்டன்' மருத்துவமனை சூப்பரின் டென்டன்ட் டாக்டர் சீனிவாசன். ''நோயாளிக்கு வலி, செலவு இரண்டும் கணிசமாகக் குறையும். அதோடு டாக்டர்களுக்குக் கிருமித் தொற்று அபாயம் இராது... ஆபரேஷன் முடிந்த பிறகு, பேஷன்ட் விரும்பினால், தமக்குச் செய்யப்பட்ட ஆபரேஷனை வீடியோ காட்சியாகக் காணலாம்!''

- நிருபர்





# பொன்விழா ஆண்டில் வழங்கிய பொக்கிஷம்!

◆ பால் வெள்ளைத்தாளில் பாபாவின் அருமை பெருமைகளை எங்கள் நெஞ்சம் கசிந்துருகும்படி வழங்கி எங்களை ஆன்மிகக்கடலில் நீச்சலிட வைத்த ஆசிரியருக்குப் பாராட்டுக்கள். சத்யசாயி சிறப்பு மலரைப் பொன்விழா ஆண்டில் 'கல்கி' எங்களுக்கு வழங்கிய பொக்கிஷமாகவே கருதுகிறோம்.

திருவட்டார், தா. சிந்துகுமார்.

◆ எப்போதெல்லாம் மக்களுக்குத் தெய்வ நம்பிக்கை குறைகிறதோ அப்போதெல்லாம் பாரதத்தில் யாராவது ஒரு பெரிய மஹான் தோன்றி ஆன்மிகத்தை போதித்து, மக்கட்குத் தெய்வ நம்பிக்கையை ஏற்படுத்துவது தொடர்ந்து ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக நடந்து கொண்டுதான் இருக்கிறது. தற்போதைய காலம் ஸ்ரீ சத்ய சாயி பாபா அந்த வரிசையில் இருக்கிறார்.

சென்னை - 94, ஆர். நடராஜன்.

◆ தெரியாத, புரியாத, அறியாத சிலபல விஷயங்களைத் தெரிந்து, புரிந்து, அறிந்து கொள்ளப் பேருதவி புரிந்தது சத்ய சாயி சிறப்பு மலர்.

வேலூர், பாற்கடல்வேந்தன்.

## செவிடன் போல் பாசாங்கு....!

◆ ....ட்டேங்கப்பா! எத்தனை விளக்கங்கள், எத்தனை குத்தல்கள், எத்தனை நினைவூட்டல்கள் - ஜனவரி 26, 30 - தலையங்கத்தில்!

செவிடன் காதில் சங்கை ஊதினால் கூட, அனிச்சையாகத் திரும்பி, 'ஒஹோ ஏதோ ஊதுகிறார் போலும்' என்று எண்ணி காதில்லா பாம்பு மகுடிக்கேற்ப தலையாட்டுவது போல தலையாட்டுவான். ஆனால் செவிடன் போல பாசாங்கு செய்பவர்கள்....?

சென்னை - 88, கபில. வேங்கடேசன்.

## கேஸ் சிலிண்டர் மீது பயணம்!

◆ சமீபத்தில் பஸ்ஸில் பயணம் செய்தபோது, முன்னால் ஒரு கேஸ்சிலிண்டர் ஏற்றிய லாரி சென்று கொண்டிருந்தது. அவற்றின் மேல்..... சில ஆண்களும் பெண்களும் உட்கார்ந்திருந்தனர். இது எவ்வளவு ஆபத்தானது என்று அவர்கள் உணரவில்லை. பாமரருக்குத் தெரியாது போனாலும் போலீஸாராவது கவனிக்க வேண்டாமா?

திருச்சி - 14, இரா. திலிப்.

## வட்டமேஜை

## பள்ளி மாணவனுக்கும் புரியும்!

◆ ''ரூபாய் மதிப்புக் குறைப்பு'' குறித்துப் பள்ளி மாணவன் கூடப் புரிந்து கொள்ளும் வகையில் மிகத் தெளிவாகக் கூறியது கட்டுரை.

சென்னை - 84, மா. தெய்வலதா.

## மூடிக்கிடக்கும் மருத்துவமனை

◆ வேடசந்தூரில் பல ஆண்டுகளாய் நாங்கள் போராடி ''மேல் நிலைப்படுத்தப்பட்ட ஆரம்ப சுகாதார நிலையம்'' பெற்றோம். 25 படுக்கைகள் கொண்ட மருத்துவமனையை ரூபாய் 20 லட்சத்தில் கட்டி, 16.8.1986 ஆம் தேதி அன்று நல்வாழ்வுத் துறை அமைச்சர் திறந்து வைத்தார். ஆனால் இந்த மருத்துவமனை மக்களுக்குப் பயன்படாமல் மூடியே கிடக்கிறது இன்றுவரை. கும்பகர்ணத் தூக்கத்தில் உள்ள சுகாதாரத் துறை விழித்தெழுமா?

வேடசந்தூர், வி. நாகசுந்தரம்.

## சுவையான தகவல்கள்

◆ வில்லுப்பாட்டில் இவ்வளவு விஷயங்களா? சுப்பு ஆறுமுகம் - பவித்ரா சந்திப்பு மிகவும் சுவையான தகவல்களை வெளிப்படுத்தியது.

பாண்டிச்சேரி - 13, டி. சுரேஷ்ராஜ்.

## 'பதவி' ஒன்று; கருத்து இரண்டு!

◆ இடத்துக்குத் தகுந்தாற்போல் நிறம் மாறும் பச்சோந்தியைப் போலவே, பதவிக்குத் தகுந்தாற்போல் பண்புகளை மாற்றிக் கொள்ளும் மனிதர்கள் சமுதாயத்தில் மலிந்திருப்பதைப் 'பதவி' சிறுகதையில் சி.எஸ். சித்ரா விவரித்துள்ள விதம் புதுமை!

நரிப்பாளையம், அ. கிருஷ்ணமூர்த்தி.

◆ ''பொறுப்புகள் தனக்கென்று வரும் போது தான் உண்மை நிலை புரியும்'' என்ற உன்னத தத்துவத்தை, 'பதவி' சிறுகதை மூலம் பலருக்குப் புரிய வைத்து, சிறப்பான சிறுகதை தந்த சி.எஸ். சித்ராவுக்கு எனது பாராட்டுக்கள்!

சத்திரம் கருப்பூர், மு. அய்யூப்கான்.

## இந்தியா போல்தான்...

◆ இங்கு நம் நாட்டில் ராஜீவ் படுகொலையை யொட்டி, ராஜீவ் கொலைக்குக் கழகமே காரணம் என ஒரு சாராரும் தேர்தல் வெற்றிக்காகத் தன் தலைவனையே காங்கிரசார் பலி கொடுத்தனர் என ஒரு சாராரும் புரளி கிளப்பிப் புலனாய்வுத் துறையையே திக்குமுக்காடச் செய்தது போன்றது தான் ஜே.எஃப்.கே. திரைப் படமும்!

கோவை, கே.ஆர். விஜயா.

பாரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பாரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை - 600 032. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2344145; சர்குலேஷன் மானேஜர் : 2344190; விளம்பரம் - சந்தா: 2344157; டைரக்டர்: 2341543.
ஆண்டுச் சந்தா - உள்நாடு: ரூ. 156/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு: ரூ. 78/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 200/- விமானத் தபால்: ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka